ஸகல ஸௌபாக்கியங்களும் தரும்

# ஸ்ரீ சந்தோஷி மாதா




பூஜையும் கதையும்



ஸ்ரீ காஞ்சி ஸ்தல காமகோடி
மட ஸம்ஸ்த்தாநஸ்ய யந் மண்டநம்
ச்ரௌ தம் ப்ராஹு ததாமநந்தி விபுதா
நீரூபகம் நிர்குணம்
தத் த்வம் ப்ரஹ்ம ஹி சந்திரசேகர குரோ
லோகாந் புநீஷே குணை :
யத்யத் கர்ம கரோமி தத்த தகிலம்
த்வத் திவ்ய பாதார்ப்பணம்.

எந்த பிரஹ்மத்தை வேதங்கள் உருவமற்றதெனவும் குணங்களற்றதெனவும் கூறுகின்றனவோ, எந்த பிரஹ்மம் உருவெடுத்துக் காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்து தனது குணாதிசயங்களால் உலகமெல்லாம் புனிதமாக்குகின்றனவோ அந்தஸ்ரீ "சந்த்ரசேகர ஸரஸ்வதி" யென்னும் ஜகத் குருநாதரின் திவ்ய பாதசரணாரவிந்தங்களில் நாங்கள் எதைச் செய்கிலும் சமர்ப்பிக்கின்றோம்.

ஸகல ஸௌபாக்யங்களும் தரும்



# ஸ்ரீ ஸந்தோஷி மாதா

## பூஜையும் – கதையும்

(பூஜை, விரதம், ஆரத்தி, ஸுப்ரபாதம் கொண்டது)



பதிப்பகத்தார்




**கிரி டிரேடிங் ஏஜென்ஸி,**
58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை – 600 004.
போன் – 494 3551

விற்பனையாளர்

**கிரி டிரேடிங் ஏஜென்ஸி,**

நேரில் பெற
10, கபாலீசுவரர் சன்னதி தெரு,
மயிலாப்பூர், சென்னை – 4.
போன் : 494 0376, 494 2530

தபாலிலும் மொத்தமாகவும் பெற
58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை – 4.
போன் : 494 3551

# ஸ்ரீ ஸந்தோஷி மாதா

பூஜையும் – கதையும்

38th Reprint
May 1997

Gitaa Series No. 11

Price 5.50

---

## சிறப்புரை

"ஸ்ரீ ஸந்தோஷி மாதா விரதம்" என்னும் உயர்ந்த இந்த வெள்ளிக்கிழமை விரதத்தைப் பின்பற்றி லக்ஷக்கணக்கான மக்கள் கருணைத் தேவியாம் ஸந்தோஷிமாதாவின் பரிபூரண அநுக்ரகத்தைப் பெற்று வருகிறார்கள். எல்லோரும் பயனடைய உதவியாக இருக்கும் இந்த ஸந்தோஷிமாதா விரதமானது முப்பத்தி ஐந்தாவது பதிப்பை அடைந்துள்ளதே இதற்கு சான்று. இவ்வாறு பக்தர்களுக்குக் கைமேல் பயன் அளிக்கும் வகையில் இப் புத்தகம் அமைந்துள்ளது. பக்தர்களனைவரும் தேவியின் அருளுக்குப் பாத்திரர்களாகிப் பெருவாழ்வு வாழ ஸ்ரீ ஸந்தோஷி மாதாவைப் பணிவன்புடன் ப்ரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்

*கிரி டிரேடிங் ஏஜென்ஸி*

## அணிந்துரை

நமது புராணங்களுக்கு உப புராணங்கள் பல உண்டு. அந்த உபபுராணங்கள் சகலருக்கும்-தெய்வங்களுக்கும் உட்பட சந்தோஷத்தை அளிப்பவையாகத் தொகுக்கப் பட்டிருக்கின்றன. புராணத்தில் வலிய இரு ப்ரம்மச்சாரிகள் உண்டு. ஒருவர் விநாயகர், இன்னொருவர் அனுமார். உபபுராணக்காரரர் இவர்களை ப்ரம்மச்சாரிகளாக விட்டு வைக்கக்கூடாதென்று அனுமாருக்கு மனைவியாக ஒரு மத்ஸ்யத்தையும், பிள்ளையாருக்கு ஒன்றுக்கு இரண்டு மனைவியரை ஏற்படுத்தி அவர்களுக்கு இரு பிள்ளைகளையும் கொடுத்தார்.

இந்த இரு பிள்ளைகளும் தங்களுக்கு ரட்சை கட்ட ஒரு தங்கையில்லையே என்று ஏங்கவே, அவர்களைச் சந்தோஷப் படுத்த, "ஸ்ரீ ஸந்தோஷிமாதா" என்ற பெண்ணையும் பிள்ளையார் பெற்றுக் கொடுத்தார். அந்த ஸந்தோஷிமாதா தனது சகோதரர்களுக்கு ரட்சை கட்டி அவர்களைச் சந்தோஷப் படுத்தியதல்லாமல் உலகத்திலுள்ள எல்லோரையும் ரட்சிக்கவும் சந்தோஷப்படுத்தவும் முன்னிற்கிருள். இந்த ஸந்தோஷிமாதவை ச்ருஷ்டித்த உபபுராணக்காரரர் சந்தோஷப்பட்டார். நம்மையும் சந்தோஷப்படுத்துகிருர்.

அந்த உபபுராணக்காரரர் யார்? இங்குதான் சிறிது சந்தேகம் ஏற்படுகிறது. ஒரு வேளை புலவர் நாகசண்முகம் தான் அந்த உபபுராணக்காரரோ என்று இந்த நூலைப்படிக்கிறவர்கள் ஐயுறலாம். ஏனேனில், இதில் புலமை மணம், புராணமணம் இரண்டும் கலந்து வீசுகிறது. பெண்கள் நல்வாழ்வுக்காக ஏற்பட்டது ஸ்ரீ ஸந்தோஷிமாதா வெள்ளிக்கிழமை விரதம். இதனால் பெண்களுக்கு மட்டும்தான் சௌபாக்யம் என்று நினைக்க வேண்டாம். பெண்கள் நல்வாழ்விலேயே ஆண்கள் நல்வாழ்வு இருப்பதால் நமது புலவர் உலகுக்கே சந்தோஷத்தை அளித்து வருகிருர். புலவர் இம்மாதிரிப் புத்தகங்கள் பலவற்றை மேலும் எழுதி இன்னும் பல விரதங்களை நமக்களிப்பாரென்று எதிர் பார்க்கிறேன்.

## பதிப்புரை

பிறந்த பயனை அடைவதற்கு பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்கும் தக்க துணை புரிவன பக்தி நூல்களே!

அந்த வகையில் தொடர்ந்து பக்திச் செல்வங்களை நூல்களாக வெளியிடுவதில் நாங்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றோம். ஸ்ரீ ஸந்தோஷிமாதா அனைவரையும் சந்தோஷமாய் வைப்பவள். விக்னேச்வரரின் திருப்புதல்வி, அவள் கதையும் விரதமகிமையும் வடதேசத்தில் மிகவும் புகழ்பெற்று விளங்குகின்றன. அவர்கள் பெற்று வரும் அருளை, அன்பை ஆற்றலை சந்தோஷம்தரும் சற்குணத்தைத் தமிழ்ப்பெருமக்களும் அறிந்து அவளை வணங்கி அவள் விரதத்தைக்கைக் கொண்டு ஸகல நன்மைகளையும் அடையவேண்டும் என்ற பெரு நோக்கோடு இதனை வெளியிடுகின்றோம்.

ஸ்ரீ ஸந்தோஷி மாதாவைப் பற்றிய ஸகல விவரங்களும் பூஜைமுறைகளும்-தோத்திரப்பாக்களும்-அஷ்டோத்திரமும் கதையும் விரத முறைகளும் இதில் அடங்கி உள்ளன. இந்த மணியான நூலுக்கு அணிந்துரை தந்து சிறப்பித்துள்ள பெரியவரான திரு. சாண்டில்யன் அவர்களுக்கு எங்கள் நன்றியையும், பணிவுள்ள வணக்கத்தையும் முதற்கண் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பூஜையையும், விரதத்தையும், உருவாக்கித் தந்த கீழாத்தூர் ஸ்ரீனிவாஸாச்சார்யார் அவர்களுக்கும்; கதை நூற்றெட்டுப் போற்றிப் (அஷ்டோத்திரம் போற்றி) பாடல்கள் முதலியவற்றை உருவாக்கித் தந்த புலவர் நாக சண்முகம் அவர்களுக்கும்-மேலட்டை சித்திரம் வரைந்து உதவியராஜா அவர்களுக்கும் உள்ளே உள்ள படங்களை வரைந்துதவிய கணேசன் அவர்களுக்கும், எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீ ஸந்தோஷிமாதாவின் ஆசி எல்லோருக்கும் இருக்க வேண்டிக்கொண்டு இதை பக்தர்களுக்கு ஸமர்ப்பிக்கின்றோம்.

கிரி டிரேடிங் ஏஜென்ஸி

# ஸ்ரீ ஸந்தோஷி மாதா விரதம்

## மேற்கொள்ளும் வழிமுறைகள்

ஸ்ரீ ஸந்தோஷிமாதா விரதம் அனைவருக்கும் எளிமையானது பலன் தருவதில் வலிமை மிக்கது.

ஸ்ரீ ஸந்தோஷிமாதா விரதம் அனைவருக்கும் உரியது என்றாலும் பெண்களுக்கு மிகவும் ஏற்றது; சிறந்தது. அந்த விரதத்தை மேற்கொள்ளுவதால் ஸகல மங்களங்களுமுண்டாகும்.

ஸ்ரீ ஸந்தோஷிமாதா விரதத்தை வெள்ளிக்கிழமையன்றுதான் தொடங்க வேண்டும். அதுமுதல் ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் பூஜை செய்துவர வேண்டும். எண்ணம் கைகூடியபின் அந்த வெள்ளியன்று பூஜையைப் பூர்த்தி செய்து விடலாம்.

இந்த விரதத்திற்கு மஞ்சள்பொடி, குங்குமம், வெற்றிலை பாக்கு, ஊதுபத்தி, சாம்பிராணி, கற்பூரம், சந்தனம், திரி நூல், நெய் அல்லது, நல்லெண்ணெய், தேங்காய், மாவிலை, பூக்கள் இவற்றை முன்னதாகவே சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸந்தோஷிமாதாவுக்கு மிகவும் உகந்தது வறுத்தகடலையும், வெல்லமுமே ஆகும். அவற்றை அவசியம் வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

விரதத்தை வீட்டிற்குள்ளேயோ, வெளியேயுள்ள தனியான இடங்களிலோ, கோயில்களிலோ செய்யலாம். எங்கு செய்தாலும் செய்யுமிடம் மிகவும் அமைதியும், தூய்மையும் உடையதாக இருக்க வேண்டும். மேடை ஒன்றை அமைத்து அதன் மீது ஸந்தோஷிமாதா படத்தை வைத்துச் சக்திக்குத் தக்கவாறு பூக்களால் அலங்கரித்துப் பூஜை செய்ய வேண்டும்.

படத்தின் முன் குத்துவிளக்கினை ஏற்றி வைக்க வேண்டும். தீர்த்தம் நிறைந்த செம்பை (கலசம்) வைக்க வேண்டும். அதற்கு மஞ்சள், சந்தனம், குங்குமம் இவைகளால் அலங்காரம் செய்ய வேண்டும்.

செம்பிற்குள் அவரவர்கள் சக்திக் கேற்ப நாணயம் ஒன்றைப்போட வேண்டும். பின்னர் செம்பின்மீது மாவிலைகளை வைத்து அதன் மீது தேங்காய் ஒன்றை வைக்க வேண்டும். அதற்குச் சந்தனத்தாலும், பூக்களாலும் அலங்காரம் செய்ய வேண்டும்.

மஞ்சள் பொடியில் சிறிது தண்ணீர் சேர்த்துப் பிசைந்து மஞ்சளினால் பிள்ளையார் பிடித்துக் கலசத்திற்கு எதிரில் வைத்துக் கொள்ளவேண்டும். கிண்ணம் ஒன்றில் கொஞ்சம் வறுத்த கடலையையும் வெல்லத்தையும் வைத்துக் கொள்ளவேண்டும்.

பின்னர் கையில் கொஞ்சம் வறுத்த கடலையும், வெல்லமும் எடுத்துக் கொண்டு. எண்ணிய காரியம் நிறைவேற வேண்டும் என்று மனதில் திடமான நம்பிக்கையுடன் சங்கல்பம் செய்து, விக்னேச்வர பூஜையையும், ஸந்தோஷிமாதா பூஜையையும் செய்ய வேண்டும். பிறகு ஸந்தோஷிமாதாவின கதையைப் பக்தி ச்ரத்தையோடு படிக்க வேண்டும். அல்லது பிறரைப் படிக்கச் சொல்லி கேட்க வேண்டும்.

கதை படித்து முடிந்ததும் மாதாவைப் பற்றிய ஸ்தோத்திரம் பாடல்களைப் பாடி நிவேதனம் செய்ய வேண்டும். பிறகு ஆரத்தி எடுக்க வேண்டும். அதன் பின் கலசத்தில் உள்ள நீரைப் பூஜைக்கு வந்தவர்களுக்குத் தீர்த்தமாகக் கொடுத்து வீடு முழுவதும் தெளித்தபின், மீதி உள்ள ஜலத்தைத் துளசிச் செடிக்கு ஊற்ற வேண்டும். நினைத்த காரியம் கை கூடிய பிறகு விரதத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

பூர்த்தி செய்கின்ற அன்று பூரி, முந்திரிப் பாயசம் வறுத்தகடலை இவற்றை நைவேத்தியம் செய்யவேண்டும். பின் எல்லோருக்கும் ப்ரஸாதங்களைக் கொடுக்கவேண்டும். வீட்டில் மைத்துணர் பிள்ளைகள் இருந்தால் அவர்கள் எட்டுப் பேருக்கு உணவு படைக்க வேண்டும். அல்லது வெளியார் குழந்தைகள் எட்டுப் பேருக்கு உணவு படைக்க வேண்டும்.

இவர்களில் யாருக்கும் கண்டிப்பாகத் தட்சிணை ரொக்கமாகக் கொடுக்கக் கூடாது.

விரதம் தொடங்கி விரதம் பூர்த்தியாகிறவரை ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் விரதம் இருப்பவர்கள் புளியோ, புளிப்புப் பதார்த்தங்களோ கண்டிப்பாகச் சாப்பிடக்கூடாது.

விரதம் பூர்த்தியாகின்ற அன்று விரதம் இருக்கிறவர்கள் புளிப்புச் சாப்பிடாமல் இருப்பதோடு மற்றவர்களுக்கும் புளிப்புப் பொருட்களை கண்டிப்பாகக் கொடுக்கவும் கூடாது.

ஸ்ரீ ஸந்தோஷிமாதா விரதத்தை மேற்கொள்பவர்களுக்கும் அதற்கு உதவுபவர்களுக்கும் எல்லாவிதமான ஸௌபாக்யங்களும் உறுதியாக உண்டாகும்.

(வறுத்தகடலை - கொண்டைக்கடலை)

---

## பொருளடக்கம்

## ஸ்ரீ ஸந்தோஷி மாதா

ஸ்ரீ ஸந்தோஷிமாதாவிற்குரிய வெள்ளிக்கிழமை விரதம் ஏற்றவர்கள் வெள்ளிக்கிழமை தோறும் ஸ்ரீ ஸந்தோஷிமாதாவிற்கு பூஜை செய்ய வேண்டும். பூஜை முடிந்தவுடன் கதையைப் படித்து ஆரத்தி செய்த பிறகு எல்லோருக்கும் தீர்த்தம், கடலை, வெல்லம், ப்ரஸாதம் விநியோகம் செய்யவேண்டும்.

## ஸ்ரீ விக்னேச்வர பூஜை

(முதலில் விக்னேச்வர பூஜையைச் செய்த பிறகு ஸ்ரீ ஸந்தோஷிமாதா பூஜையைச் செய்ய வேண்டும்.)

(பூஜை செய்ய ஆரம்பிக்கும் முன், கால் கைகளை சுத்தம் செய்தபின் ஆசமநம் செய்யவும். கையில் புஷ்பம் அக்ஷதை எடுத்துக் கொண்டு.)

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸந்ந வதநம் த்யோயேத் ஸர்வ விக்நோபசாந்தயே

(என்று சொல்லித் தலையில் குட்டிக் கொள்ளவும்.)

ததேவ லக்நம் ஸுதினம் ததேவ
தாராபலம் சந்த்ரபலம் ததேவ |
வித்யா பலம் தைவ பலம் ததேவ
லக்ஷ்மீபதே தே(அ)ங்க்ரியுகம் ஸ்மராமி ||

### ப்ராணயாமம்

ஓம்பூ:, ஓம் புவ: ஓகும் ஸுவ:, ஓம் மஹ:, ஓம் ஜந: ஓம்தப:, ஓகும்ஸத்யம், ஓம் தத் ஸவிதுர் வரேண்யம், பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: ப்ரசோயாத். ஓமாப: ஜ்யோதீரஸ:, அம்ருதம் ப்ரஹ்ம பூர்ப்புவஸ் ஸுவரோம்.

## ஸங்கல்பம்

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம், கரிஷ்யமாணஸ்ய கர்மண: நிர்விக்நேந பரிஸமாப்த்யர்த்தம் ஆதௌ விக்நேச்வர பூஜாம் கரிஷ்யே.

(மஞ்சள் பிள்ளையார் செய்து வைத்த பின் கையில் புஷ்பம் அக்ஷதை எடுத்துக்கொண்டு)

கணாநாம் த்வா கணபதிகும் ஹவாமஹே கவிம்கவீ நாம் உபமச்ரவஸ்தமம், ஜ்யேஷ்ட்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்தப ஆந ச்ருணவந் நூதிபிஸ் ஸீத ஸாதனம்.

அஸ்மிந் ஹரித்ராபிம்பே ஸுமுகம் மஹாகணபதிம் த்யாயாமி, ஆவாஹயாமி, என்று சொல்லி மஞ்சள் பிள்ளையார் மீது புஷ்பம் அக்ஷதைகளைச் சேர்க்கவும் பிறகு.

ஸ்ரீ மஹாகணபதயேநம:அர்க்யம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:பாத்யம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:ஔபசாரிகஸ்நாநம்ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:ஸ்நாநானந்தரம்
ஆச்மநீயம் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:வஸ்த்ரார்த்தம்
அக்ஷதாந் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:அலங்கரணார்த்தம்
அக்ஷதாந் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:யஜ்ஞோபவீ
தார்த்தம்
அக்ஷதாந் ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:கந்தாந்(சந்தனம்)
தாரயாமி ஸமர்ப்பயாமி
ஸ்ரீ மஹாகணபதயேநம:கந்தஸ்யோபரி
ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி

புஷ்பை : பூஜயாமி (புஷ்பம் அக்ஷதைகளை எடுத்து அர்ச்சனை செய்யவும்).

| | | | | |
|---|---|---|---|---|
| ஓம் ஸுமுகாய | நம: | ஓம் | தூமகேதவே | நம: |
| ஓம் ஏகதந்தாய | நம: | ஓம் | கணுத்யக்ஷாய | நம: |
| ஓம் கபிலாய | நம: | ஓம் | பாலசந்த்ராய | நம: |
| ஓம் கஜகர்ணகாய | நம: | ஓம் | கஜாநநாய | நம: |
| ஓம் லம்போதராய | நம: | ஓம் | வக்ரதுண்டாய | நம: |
| ஓம் விகடாய | நம: | ஓம் | சூர்ப்பகர்ணுய | நம: |
| ஓம் விக்ன ராஜாய | நம: | ஓம் | ஹேரம்பாய | நம: |
| ஓம் கணுதிபாய | நம:8 | ஓம் | ஸ்கந்தபூர்வஜாய | நம:16 |

ஓம் ஸ்ரீ மஹா கணபதயே நம: நாநா வித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

(பிறகு வெற்றிலை பாக்கு, பழம் இவைகளை நிவேதனம் செய்யவும்).

மஹாகணுதிபதயே நம: கதளீபலம் நிவேதயாமி (வாழைப்பழம் நிவேதனம் செய்யும்). பாநீயம் ஸமர்ப்பயாமி (உத்தரணியால் தீர்த்தம் எடுத்து விட-வும்.)

(உத்தரணியால் தீர்த்தம் எடுத்துத் தாம்பூலத்தில் விடவும்) தாம்பூலம் ஸமர்ப்பயாமி-(என்று சொல்லி அக்ஷதை போடவும்).

நீராஜநம் ஸமர்ப்பயாமி-(என்று சொல்லிக் கற்பூரம் ஏற்றிக் காட்டவும்.)

ப்ரார்த்தனை

வக்ரதுண்ட மஹாகாய கோடிஸூர்ய ஸமப்ரப |
அவிக்நம் குரு மே தேவ ஸர்வகார்யேஷுஸர்வதா ||
(ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்யவும்).
"கணபதி ப்ரஸாதம் சிரஸா க்ருஹ்ணுமி"-(என்று கூறி கணபதி ப்ரஸாதத்தைத் தலையில் தரித்துக் கொள்-ளவும்.)
பிறகு ஸ்ரீ ஸந்தோஷிமாதா பூஜையை ஆரம்பிக்கவும்.

## ஸந்தோஷி மாதா பூஜை

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் |
ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே ||

### ப்ராணாயாமம்

ஓம்பூ:-பூர்ப்புவஸ்ஸுவரோம்-(8-ம் பக்கம் பார்க்கவும்)

### ஸங்கல்பம்

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்ததம் சுபே சோபநே முஹூர்த்தே, ஆத்ய ப்ரஹ்மண: த்விதிய பரார்த்தே, ஸ்ரீ ச்வேத வராஹ கல்பே, வைவஸ்வத மந்வந்தரே, அஷ்டாவிம் சதிதமே கலியுகே, ப்ரதமேபாதே, ஜம்பூத்வீபே, பாரத வர்ஷே, பரதக் கண்டே, மேரோ : தக்ஷிணே பார்ச்வே, சகாப்தே, அஸ்மிந் வர்த்தமாநே, வ்யாவஹாரிகே, ப்ரபவாதி ஷஷ்டிஸம்வத்ஸராணும் மத்யே......நாம ஸம்வத்ஸரே-அயநே-ருதௌ-மாஸே பக்ஷே-யாம் சுபதிதௌ ப்ருகு வாஸர யுக்தாயாம்-நக்ஷத்ர யுக்தாயாம் சுபயோக சுபகரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம்-சுபதிதௌ மமசீக்ரமேவ விவாஹ ப்ராப்த்யர்த்தம், மம தீர்க்கஸௌமாங்கல்ய அவாப்த்யர்த்தம், மம பர்த்துஸ்ச அந்யோந்ய ப்ரீதிபுரஸ் ஸரம் அவியோகார்த்ததம்,ஸத் ஸந்தான பலாவாப்த்யர்த்தம், ஸகலஸௌபாக்ய ஸித்யர்த்தம், இஷ்டகாம் யார்த்த ஸித்யர்த்தம், ஸ்ரீஸந்தோஷி மாத்ரு பூஜாம் கரிஷ்யே, (கை அலம்பிச் சுத்த ஜலமுள்ள ஒரு கும்பத்தை அலங்கரித்து, மாவிலை வைத்து அதன் மீது கடலை, வெல்லமுள்ள பாத்திரத்தை வைத்து அதை ஸ்ரீ ஸந்தோஷிமாதாவாக நினைத்து அதன் மீது பூஜை செய்ய வேண்டும்.

ஜலத்தைத்தொட்டு, 'விக்நேச்வரம்யதாஸ்த்தாநம் ப்ரதிஷ்ட்டாபயாமி' என்று சொல்லி அக்ஷதை, புஷ்பம் சேர்த்து மஞ்சள் பிள்ளையாரை வடக்கே நகர்த்தவும்.

## கலசபூஜை

(பிறகு ஒரு சிறுபாத்திரத்தில் ஜலம் நிரப்பிச் சந்தனம், குங்குமம் இட்டு துளசி புஷ்பம் போட்டு தீர்த்த பாத்திரத்தை மூடிக்கொண்டு)

கலசஸ்ய முகே விஷ்ணு கண்டே ருத்ர : ஸமாச்ரித : |
மூலேதத்ரஸ்திதோப்ர ஹ்மா மத்யேமா த்ருகணா:ஸ்ம்ருதா |
குக்ஷௌது ஸாககராஸ்ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்தரா |
ருக்வேதோ (அ)த யஜுர்வேத: ஸாமவே தோப்யதர்வண:
அங்கைஸ்ச ஸஹிதா : ஸர்வே கலசாம்பு ஸமாச்ரிதா: ||
ஆயாந்து தேவபூஜார்த்தம் துரிதக்ஷய காரகா: |
கங்கே ச யமுநே சைவ கோதாவரி ஸரஸ்வதி |
நர்மதே ஸிந்து காவேரி ஜலே (அ)ஸ்மிந் ஸந்நிதிம் குரு ||

(என்று சொல்லி, சிறிதளவு கலச தீர்த்தம் எடுத்து பூஜா த்ரவ்யங்களையும் தன்னையும் ப்ரோக்ஷணம் செய்து கொள்ளவும்)

## கண்டா பூஜை

ஆகமார்த்தம் து தேவாநாம் கமநார்த்தம் து ரக்ஷஸாம்
கண்டாரவம் கரோம்யத்ய தேவதா ஹ்வாந லாஞ்சநம் ||

(என்று சொல்லி மணியை அடிக்கவும். பிறகு கையில் புஷ்பம் அக்ஷதை எடுத்துக் கொள்ளவும். பிறகு)

### த்யானம்

யாம் வை ஸ்துவந்தி ஸுஜனா : பராசக்திரூபாம்
சக்தி த்ரயாத்மக தநூம் தனதான துஷ்டாம் |
ஸந்தோஷ பூர்ண ஹ்ருதயாம் ஸ்மரஞதரபீஹ
ஸந்தோஷி மாதரம் அஹம் ப்ரணமாமி மூர்த்நா ||
விக்நநாத ப்ரிய ஸுதாம் ஸந்தோஷீ மாதரம் சுபாம் |
த்யாயாமி ஹ்ருதயே தேவீம் வாஞ்ச்சிதார்த்த ப்ரதாயிநீம் |
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : த்யாயாமி |
ஸர்வமங்கள மாங்கல்யே மாதஸ் ஸர்வார்த்த தாயிநி |
ஆவாஹயாமி கும்பே(அ)ஸ்மிந் மம ஸௌபாக்ய ஸித்தயே
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : ஆவாஹயாமி |
கஜாநநஸுதே தேவி காஞ்சநேந விநிர்மிதம் |
பக்த்யா தாஸ்யே ஸ்வீகுருஷ்வ வரதா பவ ச ஆஸநம் ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம :ஆஸநம் ஸமர்ப்பயாமி |
கங்காதி ஸர்வதீர்த்தேப்ய : நதிப்யச்ச ஸமாஹ்ருதம்

பாத்யம் ஸம்ப்ரததே தேவி க்ருஹாண கணப்ருத்ஸுதே ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : பாத்யம் ஸமர்ப்பயாமி |
ஸௌவர்ண கலசே புண்யதீர்த்தேப்ய: ஸமுபாஹ்ருதம் |
ஸர்வாபீஷ்ட ப்ராதாத்ரீ த்வம் ததாம்யர்க்யம்
க்ருஹாண போ ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம: அர்க்யம் ஸமர்ப்பயாமி |
ஆசம்யதாம் மஹாதேவி ஏலோசீர ஸுவாஸிதம் ||
ததாமி தீர்த்தமமலம் க்ருஹாண ஜகதாம்பிகே |
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : ஆசமனீயம் ஸமர்ப்பயாமி |
மதுபர்க்கம் மயாதேவி காஞ்சீ நூபுர சோபிதே |
ஸ்வீக்ருத்ய தயயா தேவி குருமஹ்யம் து மங்களம் ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம: மது பர்க்கம் ஸமர்ப்பயாமி |
பஞ்சாம்ருதம் இதம் திவ்யம் பஞ்ச பாதக நாசநம் |
பஞ்ச பூதாத்மிகே தேவி பாஹி ஸ்வீக்ருத்ய சங்கரி ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம: பஞ்சாம்ருதஸ்நாநம்
ஸமர்ப்பயாமி
ஸ்நாஸ்யதாம், பாபநாசாய யா ப்ரவ்ருத்த ஸுராபகா |
மயார்பிதா த்வம் க்ருஹ்ணீஷ்வ ப்ரீதா பவ தயாநிதே ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : சுத்தோதக ஸ்நாநம்
ஸமர்ப்பயாமி |
துகூலாந்யம் பராணீஹ வஸ்த்ராணி விவிதாநி ச |
ததாமி தேவ தேவேசி வித்யாதிஷ்டாநபீடிகே ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி |
உபவீதம் மயா ப்ரீத்யா காஞ்சநேந விநிர்மிதம் |
க்ருஹீத்வா த்வயி பக்திம் மே ப்ரயச்ச கருணாநிதே ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : யஜ்ஞோபவீதார்த்தம்
அக்ஷதான் ஸமர்ப்பயாமி
கந்தம் ஸுவாஸிதம் ரக்தம் குங்குமாந்விதமம்பிகே |
கணநாத ஸுதே தேஹி தீர்க்க மங்கள ஸூத்ரகம் ||
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம : கந்தாந் தாரயாமி
கார்ப்பாஸஸூத்ரம்தாஸ்யாமிஸுவர்ண மணிஸம்யுதம் |
பூஷணார்த்தம் மயா நீதம் தேஹி மே வரமுத்தமம் ||
ஸ்ரீஸந்தோஷீமாத்ரே நம: மங்களஸூத்ரம் ஸமர்ப்பயாமி |
ஜாதீ சம்பகபுந்நாக கேதகீ வகுளாநிச |
மயார்ப்பிதாநி ஸுபகே க்ருஹாண ஜகதம்பிகே |
ஸ்ரீ ஸந்தோஷீ மாத்ரே நம: புஷ்பாணி ஸமர்ப்பயாமி |

## அங்க பூஜை

| | | |
|---|---|---|
| ஓம் பாவநாயை | நம: பாதௌ | பூஜயாமி |
| ஓம் குணஜ்ஞாயை | நம: குல்பே | பூஜயாமி |
| ஓம் ஜகத்தாத்ர்யை | நம: ஜங்கே | பூஜயாமி |
| ஓம் ஜாக்ரதாதி ஸித்திதாயை | நம: ஜாநுநீ | பூஜயாமி |
| ஓம் ஊருநிர்ஜித ரம்பாயை | நம: ஊரூ | பூஜயாமி |
| ஓம் காஞ்சி குணவிராஜிதாயை | நம: கடிம் | பூஜயாமி |
| ஓம் நபோமத்ய கதாயை | நம: நாபிம் | பூஜயாமி |
| ஓம் கநகதுல்ய சரீராயை | நம: ஜகநம் | பூஜயாமி |
| ஓம் வரதாந ப்ரியாயை | நம: வக்ஷ: | பூஜயாமி |
| ஓம் ஸ்தநிதோபம வாசே | நம: ஸ்தநௌ | பூஜயாமி |
| ஓம் கண்டரவ ஸமத்வந்யை | நம: கண்ட்டம் | பூஜயாமி |
| ஓம் நேத்ர நிர்ஜிதகஞ்ஜாயை | நம: நேத்ரே | பூஜயாமி |
| ஓம் லலநாஜந ஸம்பூஜ்யாயை | நம: லலாடம் | பூஜயாமி |
| ஓம் கருணாரஸபூர்ணாயை | நம: சிர: | பூஜயாமி |
| ஓம் சிசிர்க்ருத ஸ்வாந்தாயை | நம: கர்ணௌ | பூஜயாமி |
| ஓம் சிந்தாதீத குணாந்விதாயை | நம: சிகுரம் | பூஜயாமி |
| ஓம் தரணீதேவி பூஜ்யாயை | நம: தம்மில்லம் | பூஜயாமி |
| ஓம் ஸந்தோஷி மாத்ரே | நம: ஸர்வாண்யங்காநி | பூஜயாமி |

## ஸந்தோஷிமாதுரஷ்டோத்தர சத நாமாவளி:

ஓம் ஸந்தோஷஜநந்யை நம:
ஓம் மாத்ரே நம:
ஓம் ஸர்வஸம்பத் ப்ரதாயிந்யை நம:
ஓம் ஸாமாதிவேத ஸம்ஸ்துத்யாயை நம:
ஓம் ஸமாநாதிக வர்ஜிதாயை நம:
ஓம் அகாராதி க்ஷகாராந் தாயை நம:
ஓம் ஆத்யந்த ரஹிதாயை நம:
ஓம் அங்கநாயை நம:
ஓம் அம்லாநவதனாயை நம:
ஓம் ஆம்லம்லாயமாந முகாம்புஜாயை 10 நம:
ஓம் கருணாயை நம:
ஓம் காரணாயை நம:
ஓம் கார்யாயை நம:
ஓம் காசிக்ஷேத்ரவிராஜி தாயை நம:

ஓம் சுதாச்ரவண
ஸந்துஷ்டாயை நம:
ஓம் காமிதார்த்த
ப்ரதாயின்யை நம:
ஓம் காலதேசாபரிச்
சிந்நாயை நம:
ஓம் கால கால
குடும்ப ஜாயை நம:
ஓம் குணத்ரய
ஸ்வரூபாயை நம:
ஓம் ஆர்யாயை 20 நம:
ஓம் குடபக்தசணார்ச்சி
தாயை நம:
ஓம் குணக்ராமாயை நம:
ஓம் குணாராத்யாயை நம:
ஓம் குணாராமாயை நம:
ஓம் குணாச்ரயாயை நம:
ஓம் க்ரஹார்ச்சிதாயை நம:
ஓம் க்ருஹாராத்யாயை நம:
ஓம் க்ருஹஸ்த்தஜந
போஷிண்யை நம:
ஓம் ஜயாயை நம:
ஓம் ஜயப்ரதாயை 30 நம:
ஓம் ஜப்யாயை நம:
ஓம் ஜநந்யை நம:
ஓம் ஜந்மவர்ஜிதாயை நம:
ஓம் ஜீவிதாயை நம:
ஓம் ஜீவநாயை நம:
ஓம் ஜீவ்யாயை நம:
ஓம் ஜீவலோக
ஸுகங்கர்யை நம:

ஓம் நமஸ்கார
ப்ரியாயை நம:
ஓம் நம்யாயை நம:
ஓம் நாதிந்யை 40 நம:
ஓம் விச்வமோதிந்யை நம:
ஓம் புண்யாயை நம:
ஓம் புண்யப்ரதாயை நம:
ஓம் புண்யலப்தாயை நம:
ஓம் புருஜநாச்ரி
தாயை நம:
ஓம் பவாயை நம:
ஓம் பவாந்யை நம:
ஓம் பவ்யஸ்த்தாயை நம:
ஓம் பாமிந்யை நம:
ஓம் பாவிராஜிதாயை 50 நம:
ஓம் பாக்யதாயை நம:
ஓம் பாரத்யை நம:
ஓம் பாவ்யாயை நம:
ஓம் பார்யாபுத்ரஸுக
ப்ரதாயை நம:
ஓம் மாயாயை நம:
ஓம் மாந்யாயை நம:
ஓம் மஹாதேவ்யை நம:
ஓம் மஹாதேவஸுதோத்
பவாயை நம:
ஓம் மத்யை நம:
ஓம் தாந்த்யை 60 நம:
ஓம் க்ருத்யை நம:
ஓம் கீர்த்யை நம:
ஓம் த்ருத்யை நம:
ஓம் காந்த்யை நம:

| | | | |
|---|---|---|---|
| ஓம் சுத்யை | நம: | ஓம் அம்பிகாயை | நம: |
| ஓம் ஸ்ம்ருத்யை | நம: | ஓம் சுபாயை | நம: |
| ஓம் மதுராயை | நம: | ஓம் சுபப்ரதாயை | நம: |
| ஓம் மதுரப்ரீதாயை | நம: | ஓம் சுத்தாயை | நம: |
| ஓம் மதுராநாத ஸம் ஸ்துதாயை | | ஓம் சுக்ரவார வ்ரதார்ச்சிதாயை 90 | நம: |
| ஓம் விஜயாயை 70 | நம: | ஓம் சோபநாயை | நம: |
| ஓம் விச்வஸம்ஸேவ் யாயை | நம: | ஓம் சோபநாகாராயை | நம: |
| ஓம் விஜ்ஞாயை | நம: | ஓம் சோபமாநமுகாம் புஜாயை | நம: |
| ஓம் விஜ்ஞாநதாயிந்யை | நம: | ஓம் ஸ்ரீப்ரதாயை | நம: |
| ஓம் சக்த்யாயை | நம: | ஓம் ஸ்ரீநிதயே | நம: |
| ஓம் சக்திஸ்வரூபாயை | நம: | ஓம் ஸ்ரீசாயை | நம: |
| ஓம் சாம்பவ்யை | நம: | ஓம் ச்ரிதமாநஸ தோஷதாயை | நம: |
| ஓம் சம்பு லாலிதாயை | நம: | ஓம் ஸித்திருத்திஸ தாயை | நம: |
| ஓம் சல்யாதிதோஷ ஹந்த்ர்யை | நம: | ஓம் ஸேவ்யாயை 100 | நம: |
| ஓம் சமாதி குணஸேவி தாயை | நம: | ஓம் ஸித்தயே | நம: |
| ஓம் விக்நஹந்த்ரியை 80 | நம: | ஓம் புத்தயே | நம: |
| ஓம் விக்நநாதாயை | நம: | ஓம் ஹிதப்ரதாயை | நம: |
| ஓம் விக்நராஜகுலோத் பவாயை | நம: | ஓம் க்ஷமாரூபாயை | நம: |
| | | ஓம் க்ஷமாதாராயை | நம: |
| ஓம் சரண்யாயை | நம: | ஓம் க்ஷாந்த்யை | நம: |
| ஓம் சாரதாயை | நம: | ஓம் சாந்தாயை | நம: |
| ஓம் சீதாயை | நம: | ஓம் சிவங்கர்யை | நம: |
| ஓம் சூலகட்கதராயை | நம: | | |

ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாத்ரே நம: ஓம்

நாநாவித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி ।
புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்.

கஜாநநஸுதே தேவி குடிலாலக ஸம்யுதே |
தூபம்க்ருஹாணதேவித்வம்:ஸர்வாபீஷ்டப்ரதாயிநி|
ஸ்ரீ ஸந்தோஷிமாத்ரே நம : தூபம் ஆக்ராபயாமி |
க்ருத வர்த்தி ஸமாயுக்தம் ஸர்வலோக ப்ரகாசம் |
தீபம்க்ருஹ்ணீஷ்வஸுபகேதயயாதேஹிமேஸுகம் ||
ஸ்ரீ ஸந்தோஷீமாத்ரே நம : தீபம் தர்சயாமி
சணகை: ஸஹிதம் தேவி குடம் பக்த்யா ஸமர்ப்பிதம்|
பாயஸாபூபஸம்யுக்தம்நைவேத்யம்ப்ரதிக்ருஹ்யதாம்||
ஸ்ரீ ஸந்தோஷீமாத்ரே நம: நைவேத்யம் ஸமர்ப்பயாமி
கற்பூர தீபம் ஸுபகே ஸர்வ மங்கள வர்த்தநம் |
ஸர்வவ்யாதிஹரம்தேவிக்ருஹ்யதாம்சுபம்அம்பிகே ||
ஸ்ரீஸந்தோஷீமாத்ரே நம:கற்பூரநீராஜநம்ஸமர்ப்பயாமி
ஸந்தோஷிணி ஜகந்மாத: மமஸௌபாக்யவ்ருத்தயே |
நமஸ்கரோமி பக்த்யாத்வாம் ப்ரஸந்நா வரதா பவ ||

(என்று கூறி நமஸ்காரம் செய்யும் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவின் கதையைப் படிக்கவும். பிறகு ஆரத்தி செய்யவும்.)

மேற்கண்டவாறு ஆரத்தி செய்த பின், 'அஸ்மாத் கும்பாத் ஸ்ரீ ஸந்தோஷி மாதரம் உத்யாபயாமி' என்று சொல்லி அக்ஷதை புஷ்பம் சேர்த்துப் போட்டுக் கலசத்தை வடக்கே நகர்த்தி விடவும்.

பிறகு கலசத்தின் மீதுள்ள பாத்திரத்திலிருக்கும் வெல்லம் வறுத்த கடலை (கொண்டக் கடலை) இவைகளை விநியோகம் செய்யவும்.

பிறகு கலசதீர்த்தத்தைத் தானும் உட்கொண்டு, பிறருக்கும் விநியோகம் செய்து, வீட்டில் எல்லா இடங்களிலும் தெளித்து, மீதியைத் துளசிச் செடியில் விடவும்.)



# ஸ்ரீ சந்தோஷி மாதுரஷ்டோத்தர சத நாம ஸ்தோத்ரம்

ஸந்தோஷஜநநீ மாதா ஸர்வஸம்பத் ப்ரதாயிநீ ।
ஸாமாதி வேதஸம்ஸ்துத்யா ஸமாநாதிக வர்ஜிதா ॥
அகாராதிக்ஷகாராந்தா ஆத்யந்த ரஹிதாங்கநா ।
அம்லாநவதநாம்லே நம்லாயமாந முகாம்புஜா ॥
கருணா காரணா கார்யா காசிக்ஷேத்ர விராஜிதா ।
கதாச்ரவண ஸந்துஷ்டா காமிதார்த்த ப்ரதாயிநீ ॥
காலதேச' (அ)பரிச்சிந்நா கால கால குடும்பஜா ।
குணத்ரய ஸ்வரூபார்யா குடபக்தசணார்ச்சிதா ॥
குணக்ராமா குணாராத்யா குணாராமா குணாச்'ரயா ।
க்ருஹார்ச்சிதாக்ருஹாராத்யாக்ருஹஸ்த்தஜநபோஷணி
ஜயா ஜயப்ரதா ஜப்யா ஜநநீ ஜந்மவர்ஜிதா ।
ஜீவிதா ஜீவநா ஜீவ்யா ஜீவலோக ஸுகங்கரீ ॥
நமஸ்காரப்ரியா நம்யா நாதிநீ விச்'வமோதிநீ ।
புண்யா புண்யப்ரதா புண்யலப்தா புருஜநாச்ரிதா ॥
பவா பவாநீ பவ்யஸ்த்தா பாமிநீ பாவிராஜிதா ।
பாக்யதா பாரதீ பாவ்யா பார்யாபுத்ர ஸுகப்ரதா ॥
மாயா மாந்யா மஹாதேவி மஹாதேவஸுதோத்பவா ।
மதிர் தாந்தி: க்ருதி: கீர்த்திர் த்ருதி: காந்திர் கதி: ஸ்ம்ருதி:॥
மதுரா மதுரப்ரீதா மதுராநாத ஸம்ஸ்துதா ।
விஜயா விச்'வஸம் ஸேவ்யா விஜ்ஞா விஜ்ஞாநதாயிநீ ॥
ச'க்தா ச'க்திஸ்வரூபா ச சா'ம்பவீ சம்புலாலிதா ।
சல்யாதி தோஷ ஹந்த்ரீச ச'மாதி குணஸேவிதா ॥
விக்நஹந்த்ரீ விக்நநாதா விக்நராஜ குலோத்பவா ।
ச'ரண்யா சா'ரதா சீ'தா சூ'லகட்கதராம்பிகா ॥
சு'பா சு'பப்ரதா சு'த்கா சு'க்ரவார வ்ரதார்ச்சிதா ।
சோபநா சோபநாகாரா சோ'பமாந முகாம்புஜா ॥
ஸ்ரீ ப்ரதா ஸ்ரீநிதி: ஸ்ரீசா' ச்ரிதமாநஸதோஷதா ।
ஸித்திருத்திஸுதா ஸேவ்யா ஸித்தி புத்தி ஹிதப்ரதா ॥
க்ஷமாரூபா க்ஷமாதாரா க்ஷாந்தி: சா'ந்தி: சிவங்கரீ ॥

## பலச்ருதி:

ஸந்தோஷீ மாதுரித்யேவம் புண்யமஷ்டோத்தரம் சதம் |
கதிதம் லோககல்யாண தாயகம் ஸௌக்யவர்த்தகம் ||
சுக்ர வாரே விசேஷேண படித்வா மாத்ரு ஸந்நிதௌ |
ஆரோக்யம் போகமைச்வர்யம் ஸர்வாந்காமாநவாப்
நுயாத்||

## முற்றும்
## ஸ்ரீ ஸந்தோஷி மாதா கதை

அகிலம் யாவும் அன்னையின் அருளாலேயே வாழ்கிறது. அன்னை உலகைக் காக்கப் பல்வேறு வடிவங்கள் எடுத்து இரட்சிக்கிருள்.

மதுரையில் மீனாட்சியாகி, காஞ்சியில் காமாட்சியாகி, காசியில் விசாலாட்சியாகி அருள் பாலிப்பதுடன். திருக்கடவூரில் அபிராமியாகி, திருமயிலையில் கற்பகாம்பாளாகித் தலங்கள் தோறும் ஒவ்வொரு திருநாமமும் பெற்று விளங்குகிருள்.

இவற்றோடு, தன் அருள் பெற்ற சில குழந்தைகளையும் அவள் பிறக்கச் செய்து அருள் பாலிக்கிருள்.

உமாதேவியான பரமேச்வரி, இலக்குமி, ஸரஸ்வதி இந்த மூன்று தெய்வங்களின் மகளாகத் தோன்றியவள் தான் தேவி ஸந்தோஷி மாதா.

தன்னைத் தொழுபவர்களைச் ஸந்தோஷமாக வைப்பவள். ஆதலால், அவளுக்கு முத்தேவியும் ஐங்கரனும் அந்தப் பெயரைச் சூட்டினார்கள்.

ஸந்தோஷி மாதா குலமங்கையர் தொழவேண்டிய குலவிளக்கு.

விரத மஹிமையை உலகிற்கு உணர்த்திய வெற்றித் தெய்வம் இவள்.

இந்தத் தெய்வத்தாயின் கதை புனிதமானது; உருக்கமானது; எல்லோருக்கும் முக்கியமாகப் பெண்களுக்கு வரப்பிரசாதம் போன்றது. அதனை அறிந்து அந்தத் தெய்வத்தாயைப் போற்றி வெள்ளிக்கிழமை விரதமிருந்தால் எல்லோரும் பெரு வாழ்வு பெறலாம்.

பெருமை மிக்க ஸந்தோஷிமாதாவின் வரலாற்றை இனிக் காண்போம

## ஸ்ரீ ஸந்தோஷி மாதா வரலாறு

ஆவணி மாதம் பௌர்ணமி நன்னாள்.

வடதேசமெங்கும், தங்கள் சகோதரரகளுக்கு ஸகல மங்களங்களும் உண்டாக வேண்டும் என்று சகோதரிகள் ரட்சைகளைக் கட்டும் ரட்சாபந்தனப் பெருவிழா நடக்கிறது.

ஒவ்வொரு வீட்டிலும் குதூகலம்; ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஆனந்தம்.

மண்ணுலகில் இவ்விழா இவ்வாறு நடந்து கொண்டிருக்கும் வேளையில் விண்ணுலகில் கயிலைமலையில் விநாயகப்பெருமான் தம் இடத்தில் அமர்ந்திருக்கிருர். அவர் அருளால் சித்திக்கும், புத்திக்கும் பிறந்த இரு ஆண்பிள்ளைகள் அவரை நோக்கி ஓடிவருகிருர்கள். அப்பொழுது நாரதமகா முனிவர் அங்கு வந்து சேருகிருர். ரட்சாபந்தனத்தின் மகத்துவம் பற்றிக் கூறுகிருர். உடனே அந்தப் பிள்ளைகள் நாங்களும் இனி ரட்சை கட்டிக்கொள்ள வேண்டும். அதற்கு எங்களுக்கும் ஒரு சகோதரி வேண்டும் என்று அடம் பிடிக்கிருர்கள்.

"சகோதரி வேண்டும் என்ருல் எங்கே போவது?", என்று விநாயகப் பெருமான் கேட்கிருர்.

"ஸகலருக்கும் ஸகல ஸௌபாக்கியங்களையும் நல்கும் பெருமாளே? நீங்கள் நினைத்தால் நடவாதது என்ன? உங்கள் அருளால் இந்தப்பிள்ளைகளுக்கு ஒரு சகோதரியை உண்டாக்கிக் கொடுங்கள்" என்று நாரதர் கூறுகிருர்.

உடனே விநாயகப் பெருமான் சித்தி, புத்தி என்ற தம்மனைவிமார் மூலம் அழகே உருவான ஒரு சகோதரியை அந்தப் பிள்ளைகளுக்கு உருவாக்கிக் கொடுக்கிருர்.

அந்தக் குழந்தை பார்வதியின் சக்தியையும், லட்சுமி தேவியின் செல்வத்தையும், ஸரஸ்வதி தேவியின் கல்விச் சிறப்பையும் பெற்றுத் திகழுமாறு விநாயகப் பெருமான் அருள் பாலிக்கிருர்.



தேவை ஒரு சகோதரி

மூன்று தேவிமார்களும் அங்குத் தோன்றி அந்தக் குழந்தைக்கு ஆசி வழங்குகிறார்கள்.

தோன்றிய குழந்தை தம் சகோதரர்களுக்கு ரட்-சையைக் கட்டி வாழ்த்துகிறாள்.

"இந்தப் பிள்ளைகளுக்குச் சந்தோஷத்தை உண்டாக்-கியதால் இக்குழந்தை 'சந்தோஷி' என்ற பெயரைப்-பெற்று வாழ்வாள்! இவளை வணங்குபவர்கள் எல்லாச் செல்வங்களையும் அடைந்து சந்தோஷமாக வாழ்வார்-கள்" என்று மும்மூர்த்திகளும் வாழ்த்துகிறார்கள்.

"வெள்ளிக்கிழமை உங்கள் மகள் பிறந்துள்ளாள். வெள்ளிக் கிழமை அவளை எண்ணி விரதமிருப்-போர் ஸகல ஸௌபாக்யங்களையும் அடைவார்கள். பெருமாளே! உங்கள் அன்பால் உருவான உங்கள் மகளை மண்ணுலகத்து மக்கள் வணங்கி வாழ்வாங்கு வாழ அருள் புரிய வேண்டும்" என்று நாரதமுனிவர் வேண்டுகிறார்.

அவ்வாறே விநாயகப் பெருமான் அருள் புரிகிறார்.

ஸந்தோஷி மாதாவின் கதையை அறிந்து; அவள்-மேல் பக்தி கொண்டு, வெள்ளிக்கிழமை விரதமிருந்து, எண்ணற்றவர்கள் பலன் பெற்றார்கள் என்றாலும்; பானை-னச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல் ஸந்தோஷி மாதாவை வணங்கி வழிபட்டு விரதமி-ருந்து பெரும் பலன் பெற்ற சுனீதி என்ற உத்தமியின் கதையை இனிக் காண்போம்.

## சுனீதியின் கதை

ஆனந்த நகர் என்பது ஓர் அழகிய ஊர். அந்த ஊரில் கோபால்நாத் என்று ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த பக்தர், அற்புதமாகப் பாடும் ஆற்றல் பெற்றவர்.

அவருக்கு சுனீதி என்ற ஒரு மகள். இளமையி-லேயே அவள் தாயை இழந்து விட்டாள். அதனால் கோபால்நாத்தே தாயாகவும், தந்தையாகவும் இருந்து சுனீதியை மிகவும் அன்போடு வளர்த்து வந்தார். தாயைப் போலப் பிள்ளை என்பார்கள். தாய் இல்லையாயினும் தந்தையே தாயாகவும் விளங்கிய-

தால் அவர் போலவே சுனீதி மிகுந்தபக்தி உள்ளவளாக வளர்ந்தாள்.

அவளுடைய பக்தியையும், பணிவையும் கண்டு கோபல்நாத் மனம் பூரித்தார், தன் ஒரே மகள் மிகச் சிறந்த வாழ்க்கையைப் பெற வேண்டும் என அவர் விரும்பினார். அதனால் ஒரு வெள்ளிக்கிழமையன்று ஸந்தோஷிமாதா படம் ஒன்றை வாங்கி வந்தார். மகளிடம் அதைக் கொடுத்து ஸந்தோஷிமாதாவின் அற்புத மஹிமைகளையெல்லாம் கூறினார்.

சுனீதி பக்திப் பரவசத்தோடு ஸந்தோஷிமாதா படத்தைப் பெற்றுக் கொண்டாள். வெள்ளிக்கிழமை தோறும் பாடல்கள் பாடி மாதாவைத் துதித்தாள். அவள் ஸந்தோஷிமாதாவிடம் கொண்ட பக்தியைக் கண்ட கோபால்நாத் “மகளே உனக்கு மிகவும் சிறந்த கணவன் வாய்ப்பான்” என்று கூறினார்.

அந்தக் கிராமத்திற்குப் பக்கத்தில் சனந்தகடி என்ற ஒரு கிராமம் இருந்தது. அந்த ஊரில் கிழவி ஒருத்தி வசித்து வந்தாள். அவளுக்கு ஏழு பிள்ளைகள். அவர்களில் முதல் ஆறுபேரும் தக்க உத்தியோகத்தில் இருந்தார்கள். இளைய மகன் போலாநாத் மட்டும் இளமை முதலே சிறந்த பக்தனாகவும் பஜனைகள் பாடுவதில் வல்லவனாகவும் இருந்தான்.

போலாநாத் மிகவும் நல்லவனாக இருந்து என்ன பயன்? முதல் ஆறுபிள்ளைகளும் வருமானம் உள்ளவர்களாக இருந்ததால் அவர்களையே கிழவி மிகவும் போற்றி வந்தாள். ஒருவர் பின் ஒருவராக அந்த ஆறு பேர்களுக்கும் திருமணங்களைக் கிழவி முடித்து வைத்தாள். அண்ணன்மார்கள் மட்டுமல்லாமல் அவர்கள் மனைவிமார்களும் போலாநாத்தை மிகவும் அலட்சியமாகவே நடத்தினார்கள்.

“இவனுக்கு யார் பெண்கொடுக்கப் போகிறுர்கள்” என்று அவர்கள் கேலிபேசி வந்தார்கள். ஆறு மருமகள்களோடு கிழவியும் சேர்ந்துகொண்டு, தான் பெற்ற மகன் போலாநாத்தையே குறைவாக எண்ணத்தொடங்கினாள்.

போலாநத் இதையெல்லாம் ஒரு போதும் பொருட்

படுத்தியதில்லை. வெள்ளிக் கிழமையானால் கோயிலுக்குப் பஜனை செய்யப் போய்விடுவான். அவனுக்கு அந்த வகையில் சில நல்ல நண்பர்கள் இருந்தார்கள். இதனால் வெளியில் போலாநாத்துக்கு மிகவும் நல்ல பெயர் இருந்து வந்தது.

ஒரு வெள்ளிக்கிழமையன்று கோபால்நாத் தன் வீட்டு முற்றத்தில் அமர்ந்து ராமாயணம் படித்துக் கொண்டிருந்தார்.

சுனீதி ஸந்தோஷி மாதாவுக்குப் பூஜை செய்துவிட்டுத் தன் தந்தைக்குப் பிரசாதங்கள் கொண்டுவந்து கொடுதாள்.

"மகளே நான் ராமாயணம் படித்துக் கொண்டிருக்கிறேன். ஸீதாப்பிராட்டியை மணக்க இராமபிரான் வந்தது போல மகாப்க்தையான உன்னை மணக்கவும் ஓர் உத்தமன் வருவான்" என்று கூறி அவர் ஆசிர்வதித்தார்.

அன்று மாலை அந்த ஊர்க் கோயிலில் நடந்த திருவிழாவிற்குப் பஜனைபாடப் போலாநாத் தன் நண்பர்களோடு வந்திருந்தான். அவனது பக்தி சிரத்தையான பாடலும் ஆடலும் கோபால்நாத்தையும் சுனீதியையும் மிகவும் கவர்ந்தன.

பஜனை முடிந்ததும் கோபால்நாத் போலாநாத்தைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்தார்.

போலாநாத்தின் பண்பும், பணிவும் கோபால்நாத்துக்கு மிகவும் பிடித்தன. காலையில் தன் மகளிடம் ராமச்சந்திரமூர்த்தியைப் போல உனக்கும் ஒரு கணவன் வருவான் என்று சொன்னது பலித்து விட்டதென்றே அவர் நினைத்தார்.

போலாநாத்தின் தாயைக் கோபால்நாத் போய்ப்பார்த்தார். தன் மகளை மருமகளாக்கிக் கொள்ளும்படி வேண்டினார்.

ஏழைப் பெண் என்றதும் நன்ருக வேலை வாங்கலாம் என்று முன்னர் அந்த வீட்டிற்கு வந்த ஆறு பேரும் நினைத்தார்கள். அவர்கள் எண்ணுவது தானே சட்டம்? அவர்கள் இந்தப் பெண்ணையே போலாநாதத்துக்கு மணம் முடித்து விடலாம் என்று கூறினார்கள்.

கிழவி உடனே அதற்கு உடன் பட்டாள்.

போலாநாத்துக்கும், சுனீதிக்கும் திருமணம் அம்மனின் அருளாலும் ஸ்ரீராமரின் அருளாலும் நன்குருநடந்தேறியது. போலாநாத்தின் அண்ணன்மார்களின் மனைவியர் ஆறு பேரும் அவனிடமும், அவன் மனைவியிடமும் நிறைய வேலை வாங்கினார்கள். இருவரும் மிகவும் பொறுமையோடு குடும்பம் நடத்தி வந்தார்கள்.

நாள்தோறும் சமையல் முடிந்தவுடன் கிழவி தன் ஆறு பிள்ளைகளையும் அழைத்து உணவு படைப்பாள். பின் அவர்கள் சாப்பிட்டு மீந்ததை எடுத்து ஒரு தட்டில் வைப்பாள். பிறகு போலாநாத்தை அழைத்து அதைப் புதிய உணவு போலக் கொடுப்பாள். நாள்தோறும் இப்படியே அவள் செய்து வந்தாள். இதை அறியாத போலாநாத் வேறுபாடில்லாமல் அந்த உணவுகளை உண்பதுடன் தாயிடம் எப்போதும்போல பற்றோடும், பக்தியோடும் இருந்து வந்தான்.

ஒருநாள் தன் கணவனுக்கு அவன் தாய் எச்சில் உணவுகளை எடுத்து வைத்துக் கொடுப்பதை சுனீதி பார்த்து விட்டாள். அவள் உள்ளம் வேதனையால் விம்மியது; கண்கள் கலங்கின.

அன்று இரவில் சுனீதி தன் கணவனிடம் இதைப்பற்றிக் கூற விரும்பினாள். ஆனாலும், கணவன் சினம் அடைவானோ என்று தயங்கினாள்.

அவள் தயக்கத்தைக் கண்டு வியப்படைந்த போலாநாத் "எதாக இருந்தால் என்ன? தைரியமாகச் சொல்" என்று கூறினான்.

அவள் அன்னை அவனுக்கு எச்சில் உணவுகளைப் படைப்பது பற்றி எடுத்துக் கூறினாள்.

"ஒரு போதும் என்தாய் இப்படிச் செய்ய மாட்டாள்" என்று அவன் கூறினான்.

"உங்களுக்கு உங்கள் தாயிடம் மரியாதையும், பற்றும் பக்தியும் இருப்பதை நான் மிகவும் விரும்புகிறேன். அதே சமயம் என் கணவரின் மானமும், மரியாதையும், எனக்கு முக்கியமல்லவா? நான் என் கண்களால் பார்த்ததையே கூறுகிறேன். நீங்கள் ஒருமுறை பாருங்கள். உங்களுக்கு அப்பொழுதுதான் என்

பேச்சில் நம்பிக்கை ஏற்படும்" என்று சுனீதி கூறினாள்.

மறுநாளே இதுபற்றிய உண்மையை அறிந்து-கொண்டுவிடவேண்டும் என்ற துடிப்பு அவனுக்கு ஏற்பட்டது.

அவன் நினைத்ததற்கு ஏற்ப மறுநாள் பெரிய பண்டிகை எனவே, பலவகைத் திண்பண்டதங்களைச் செய்தார்கள். தன் எண்ணத்தைச் செயலாக்கிக்கொள்ள நினைத்த போலாநாத் வயிற்று வலி என்று கூறிவிட்டு, சமையல்கட்டின் ஒரு மூலையில் படுத்துக்கொண்-டான். போர்வையை வேறு இழுத்துப் போர்த்திக் கொண்டான்.

வழக்கம் போல் கிழவி ஆறு பிள்ளைகளையும் சாப்-பிட அழைத்தாள். அவர்கள் சாப்பிட்டுச் சென்ற பிறகு போலாநாத் தூங்குவதாக நினைத்து அவள் அவர்கள் உண்டு மீந்த எச்சில் பொருட்களைத் தட்டில் எடுத்து வைத்தாள்.

பிறகு அதை எடுத்துக் கொண்டு போலாநாத் படுத்-திருந்த இடத்திற்கு சென்ருள். தட்டி எழுப்பினாள். தூங்குவது போலப்படுத்திருந்த அவனும் எழுந்தான். "சாப்பிடு" என்று அன்போடு கூறுபவள் போல நடித்-தாள்.

தாயின் ஓரவஞ்சனையான செயல்களை கண்ட போலாநாத் மிகுந்த வேதனையை அடைந்தான். துயரத்தால் அவன் மனம் குன்றியது. நாம் சம்-பாதிக்காததுதானே இந்த நிலைக்குக் காரணம் என்று மனம் புழுங்கினான். தன் மனைவி சொன்னது முற்-றிலும் உண்மை என்பதை உணர்ந்தான் : தாயின்மீது அவனுக்குக் கடுமையான வெறுப்பு ஏற்பட்டது. ஆயி-னும்; பெற்றவள் என்பதால் பெரும் மரியாதை வைத்த அவ்ன் தன் வெறுப்பை வெளியே காட்டவில்லை. "அம்மா எனக்குத்தான் வயிற்று வலி என்று சொன்-னேனே, சாப்பாடு வேண்டாம்" என்று கூறினான்.

ஒப்புக்குத்தானே அவள் சாப்பாடு போடுகிருள், உண்மையாகவா போடுகிருள்? எனவே அவன் வேண்-டாம் என்று கூறியதும் அவள் சாப்பாட்டுத் தட்டை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள்.

"அம்மா" என்று போலாநாத் அழைத்தான்.

"என்ன" என்று தாய் கேட்டாள்.

"அம்மா" நான் நாளை வெளியூர் போகலாம் என்று இருக்கிறேன்" என்று கூறினான்.

"ஏன்?! என்று தாய் கேட்டாள்.

போலாநாத் மௌனமாக இருந்தான்.

மகன் ஏதோ வெறுப்பாகப் பேசுகிறுன் என்பதைக் கிழவி புரிந்து கொண்டாள்: அவன் போய்விட்டால் எச்சில் சோறு கூடப் போட வேண்டாமல்லவா? "நாளை போவதை இன்றைக்கே போயேன்" என்று அவள் சீறினாள்.

அப்பொழுதே புறப்படுவதெனப் போலாநாத் முடிவு செய்தான். தூரத்திலே இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு நின்ற சுனீதியின் கண்களில் நீர் பெருகியது.

போலாநாத்தின் கண்களும் கலங்கின. அவன் அங்கிருந்து மனைவி நிற்கும் இடத்திற்குச் சென்றுன். அவளை மாட்டுத் தொழுவம் பக்கம் அழைத்துச் சென்றுன்.

மாமியார் ஏதாவது கூறுவாள் என்று பயந்து அவள் சாணத்தைத் தட்டத் தொடங்கினாள்.

"சுனீதி!! நான் வெளியூர் போவதென முடிவு செய்து விட்டேன்" என்று போலாநாத் கூறினான்.

அவன் முடிவு அவளுக்கு மகிழ்ச்சியே தந்தது என்றுலும் கணவன் உண்ணுமல் பட்டினியாகப் புறப்படுவதை எண்ணிக் கலங்கினாள்.

"சாப்பிடாமல் போகிறீர்களே" என்று அவள் கேட்டாள்.

"நாயினும் கேவலமாக எச்சில் உணவை உண்டு செல்வதைக் காட்டிலும்; உண்ணுமல் செல்வதே மேல். நீ இவர்களிடமிருந்தால் மிகவும் துன்பப்படுவாய். எனவே உன் தந்தையிடம் போய்விடு. நான் வந்த பிறகு வரலாம்!" என்று அவன் கூறினான்.

"நான் பிறந்த இடத்திற்குப் போக மாட்டேன். துன்பமோ, இன்பமோ புகுந்த இடத்திலேயே இருப்பேன்; நீங்கள் சீக்கிரம் வந்து விடுங்கள்"; என்று

அவள் கூறினாள்.

"சுனீதி, உன் உயர்ந்த பண்புக்கு ஒரு குறையும் வராது நீ என்றும் தெய்வபக்தியோடு தர்மத்தை மதித்து நட; பெரியோர்களை வணங்கி வாழ்ந்துவா" என்று அவன் கூறினான்.

"என்னைப் பற்றி நீங்கள் கவலை கொள்ளாதீர்கள் நமக்குத் தெய்வம் துணை நிற்கும்" என்று கூறியவள்.

"உங்கள் அன்பின் அடையாளமாக எனக்கு ஏதாவது தந்து செல்லுங்கள்" என வேண்டினாள். உடனே அவன் தன் விரலில் இருந்த மோதிரத்தை எடுத்து அவளுக்கு அணிவித்தான்.

"உன் அன்பின் அடையாளமாக ஏதாவது எனக்குக் கொடு" என்று அவன் கேட்டான்.

"சுவாமி! என்னிடம் என்ன இருக்கிறது? அன்புதான் இருக்கிறது" என்று கூறியவள் தன்னை மறந்து கணவனைத் தழுவிக்கொண்டதால் அவள் கை அடையாளங்கள் அவன் முதுகில் பட்டன.



"சாணியும் அன்பின் சின்னமாகலாம்"

சாணிக்கை பட்டுவிட்டதே...என்று அவள் வருந்தினாள் "வருந்தாதே அதுவும் அன்பின் அடையாளம் தானே" எனக் கூறினான்.

"இந்தப் பேதையை நீங்கள் ஒரு போதும் மறந்து விடாதீர்கள்" என்று கண்களில் நீர் மல்க வேண்டியவள் அவன் பாதங்களில் விழுந்து வணங்கி விடை கொடுத்தாள். போலாநாத் புறப்பட்டுச் சென்றான்.

அவன் சென்ற பிறகு மாமியாரும் மூத்த மருமக்கள் ஆறுபேரும் சுனீதியை எந்த நேரமும் இரக்கமில்லாமல் வேலை வாங்கத் தொடங்கினார்கள். மாட்டுக் கொட்டிலைக் கழுவுவது, சாணி தட்டுவது, மாட்டைக் குளிப்பாட்டுவது, பால்கறப்பதாகிய எல்லா வேலைகளையும் அவளே செய்தாள். ஆனால்; அவற்றை அவள் சுமையென நினையாமல் புண்ணியமாக எண்ணியே செய்து வந்தாள்.

இராமபிரானிடமிருந்து கொண்டு வந்து அனுமான் கொடுத்த கணையாழியைக் கண்டு ஆனந்தப்பட்ட ஸீதாப்பிராட்டியைப் போல், வேலைகள் முடிந்த நேரத்தில் கணவன் கொடுத்த மோதிரத்தைப் பாரத்து அவள் மகிழ்ந்தாள். அவன் விரைவில் வரவேண்டும் என்று தான் இளமைக் காலம் முதலே வணங்கி வரும் ஸ்ரீ ஸந்தோஷிமாதாவைப் பிரார்த்தித்தாள்.

போலாநாத் பசி தாகத்தோடு நடந்து கொண்டே இருந்தான், களைப்பால் அவன் மிகுந்த இன்னலுக்கு ஆளானான். இரண்டாம் நாள் அவன் மாதவன்பூர் என்ற ஊரை அடைந்தான். மாலை நேரத்தில் செய்வதறியாது கடைவீதி வழியே நடந்து கொண்டிருந்தான். கடை வீதியின் கடைசிப்பகுதியில் சில லேவாதேவிக் கடைகள் (கொடுக்கல் வாங்கல்) இருந்தன. அதில் அந்த நேரத்திலேயே சில கடைகளை அதன் முதலாளிகள் மூடிக்கொண்டு சென்று விட்டார்கள். ஒரு கடையில் வியாபாரி ஒருவர் தனியாக உட்கார்ந்திருந்தார். அங்கு சந்தடி குறைவாக இருந்தது. பக்கத்துக் கடைகளும் மூடிஇருந்தன. இதைப் பயன் படுத்திக் கொண்டு அவரை அடித்துப் போட்டு விட்டுப் பணங்களையும், நகைகளையும் அள்ளிச் செல்-

லும் நோககத்தோடு திருடன் ஒருவன் அந்த வியா-பாரிக்குப் பின்புறம் கையில் தடி ஒன்றோடு அடிமேல் அடிவைத்து வுந்து கொண்டிருந்தான்.

இந்தக் காட்சியை அப்பக்கமாக வந்து கொணடி-ருந்த போலாநாத் பார்த்துவிட்டான். இயல்பாகவே ஈவுஇரக்கம் மிகுந்த அவனுக்கு வியாபாரியைக் காப்-பற்ற வேண்டும் என்ற எண்ணம் மேலிட்டது. அசு-ரத்தனமாகத் தைரியம் ஏற்பட்டன; உடம்பில் தெம்பு பிறந்தது. பாய்ந்து சென்று அந்தத் திருடனை அவன் பிடித்தான். அகப்பட்டுக் கொண்ட திருடன் தப்பி-னால் போதும் என்று ஓடத்தொடங்கினான்.

வியாபாரி நடந்ததை அறிந்தார். போலாநாத்தின் உதவியை மிகவும் போற்றினார். "காலத்தால் செய்-யும் உதவிதான் சிறந்தது" அதை நீ செய்திருக்கிருய் என்று பாராட்டினார். பிறகு போலாநாத்தை ஆதர-வுடன் தன் அருகில் அமரச்சொன்னார். அவனை பற்றி விவரங்களைக் கேட்டார்.

போலாநாத் அவரிடம் தன் சோதனை மிகுந்த கதையைக் கூறினான்.

"இன்றிலிருந்து உனக்கு நற்காலம்தான்; என்உயி-ரைக்காத்தாய்; உன் துயரத்தை நான் போக்குகிறேன். இனி நீ என் பிள்ளை போல!" என்று கூறி அவனைத் தன் இல்லத்திற்கு அவர் அழைத்துச் சென்ருர்; குளிக்-கச் சொன்னார்; புதிய ஆடைகள் கொடுத்தார்; உணவு உண்ணச் சொன்னார்; தன் கடையிலே வேலை பார்க்குமாறும் தக்க ஊதியம் தருவதாகவும் கூறினார்.

மறுநாள் முதல் போலாநாத் கடைக்குச்சென்ருன்...-பொறுப்போடு காரியங்களைக் கவனித்து வரலானான்.

இந்தச் சூழ்நிலையில் இவன் இருக்க, பல்வேறு துன்பங்களுக்கு இலக்காகி வந்த சுனீதி நாள்தோறும் மானசிகமாக ஸ்ரீ ஸந்தோஷிமாதாவை வணங்கி வந்-தான்.

நாட்டில் ஸ்ரீ ஸந்தோஷிமாதாவை வணங்குபவர்க-ளும் அவள் விரதத்தை மேற்கொள்பவர்களும் பெருகி வருவதை 'உமாமகேச்வரியும் இலக்குமியும் ஸரஸ்வ-தியும்' கண்டார்கள்.




"எங்களுக்கில்லாத பெருமை சந்தோஷிக்கா"

"விண்ணுலகின் வெற்றித் தெய்வங்களான நமக்கில்லாத பெருமை மண்ணுலகில் இந்தச் ஸந்தோஷிக்கு இருக்கிறதே!" என்று அவர்கள் எண்ணினார்கள். பெருந்துன்பத்திற்கு இலக்காகி நிற்கும் சுனீதி தங்களை நினைக்காமல் ஸந்தோஷியைத்தானே நினைக்கிருள், என்று அவர்கள் வருத்தமுற்றுர்கள்.

எனவே, அந்த முத்தேவிகளும் போலாநாத்தைப் பெரியவனாக்கி, அதன் மூலம் அவன் சுனீதியை மறக்கும் படிச் செய்ய நினைத்தார்கள்.

உமாமகேச்வரி அவனுக்குத் தைரியத்தை நல்கினாள் இலக்குமி பொருளை நல்கினாள்; ஸரஸ்வதி கல்வியை நல்கினாள்.

போலாநாத் நாளுக்குநாள் மிகவும் திடமாக மிகநுட்பமாகத் தொழிலைக் கவனித்தான். பணம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகியது.

போலாநாத் சாமர்த்தியத்தையும், அதிர்ஷ்டத்தையும் கண்ட அந்த வியாபாரி அவனைச் சமப் பங்குதாரன் ஆக்கி அவனிடம் கடை மேற்பார்வையை ஒப்படைத்தான். பின் கவலையற்ற நிலையில் தீர்த்த யாத்திரை புறப்பட்டான்.

கடை வேலைகளாலும் கணக்கின்றிப் பொருள் பெருகியதாலும் போலாநாத் சுனீதியை முற்றும் மறந்தான். மூன்று தேவியின் எண்ணமும் அதுதானே!

சுனீதி நிலைமை நாளுக்குநாள் மோசமாயிற்று. மாடுகளோடு அவள் மாடாக உழைததாள். மாட்டுக்கொட்டிலில் தான் அவள் குடியிருக்கும் நிலைமை உண்டாயிற்று. வீட்டுவேலைகளைப் பார்ப்பதோடு மட்டும் கிழவி அவளை விட்டு விடவில்லை. காட்டிற்குச் சென்று விறகு கொணடு வரும்படியும் கட்டாயப்படுத்தினாள்.

கணவன் ஒருநாள் வருவான், கவலைகள் அனைத்தும் தீரும் என்று நம்பி எல்லாக் கொடுமையயும் அவள் பொறுத்துக் கொண்டு வந்தாள். என்ருலும் நாள் ஆக ஆகக்கணவன் வராததும், எந்தக் தகவலும் வராததும் அவளுக்குப் பெருங் கவலையைத்

தந்தது.

ஒரு நாள் அவள் விறகுக்கட்டுடன் வீட்டை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தாள். கணவன் நலமுடன் வருவாரா என்று எண்ணமிட்டுக் கொண்டே வந்தவள் கணவன் நலமுடன் வரவேண்டுமென்று ஸ்ரீ ஸந்தோஷிமாதாவைப் பிரார்த்தித்துக் கொண்டே நடந்தாள்.

சற்றுத் தொலைவிலிருந்து ஆலய மணி ஓசை கேட்டது. அது அவளுக்கு மிகுந்த மன நிறைவைத் தந்தது.

மணி ஓசை வந்த பக்கம் அவள் போனாள். அங்கே அழகிய சிறிய கோயில் ஒன்று இருப்பதைக் கண்டாள். விறகுக் கட்டையை ஒரு ஓரமாக வைத்துவிட்டு உள்ளே சென்றாள்.

அங்கே ஒரு பெண் கதை படித்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிச் சில பெண்கள் உட்கார்ந்து கதை கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

சுனீதி ஒரு ஓரமாக நின்று அந்தக் கதையைக் கேட்டாள். அந்த அம்மாள் ஸ்ரீ ஸந்தோஷிமாதாவின் கதையைத்தான் படிக்கிறாள் என்பது அவளுக்குப்புரிந்தது. ஆனாலும், அதற்கு மேல் அவளுக்கு ஒன்றும் தெரியவில்லை.

கதை படித்து முடித்தும் அமபாளுக்கு ஆரத்தி எடுத்து, அனைவருக்கும் பிரஸாதம் வழங்கியபோது அந்த அம்மாள் சுனீதி நிற்பதைக் கண்டாள். அவளைத்தன் அருகில் அழைத்து விசாரித்தாள்.

விறகு வெட்ட வந்தவள் மணி ஓசை கேட்டு இங்கு வந்தேன். "நீங்கள் என்ன செய்கிறீர்கள்" என்று அவள் கேட்டாள்.

"நாங்கள் அனைவரும் ஸந்தோஷிமாதாவின் விரதத்தை எடுத்துக் கொண்டிருக்கிறோம்" என்று அந்த அம்மாள் கூறினாள்.

"எனக்குச் ஸந்தோஷிமாதா கதை தெரியும். ஆனால் விரதம் எடுக்கும் விவரங்கள் தெரியாது! அதை எடுப்பதால் என்ன பயன்"? என்று அவள் கேட்டாள்.

"ஸந்தோஷிமாதா விரதம் இருப்பதால் பல நன்மைகள் உண்டாகும். இந்த விரதத்தை மேற்கொண்டால்

எண்ணியது நடக்கும்! இனிய கணவன் கிடைப்பான்! பிரிந்த கணவன் வருவான். சந்தான பாக்கியம் உண்டாகும். செல்வம் பெருகும், குடும்பத்தில் குழப்பம் இருந்தால் நீங்கும். ஸகல நலன்களும் உண்டாகும். அனைவருக்கும் ஸந்தோஷிமாதா விரதம் பெரும் பலனைத் தருவதோடு பெண்களுக்கு ஈடு இணையற்ற பலனைத் தரும்.

"பிரிந்த கணவன் வருவாரா"? என்று மிகுந்த ஆவலோடு சுனீதி கேட்டாள்.

"கண்டிப்பாக வருவார்! களிப்பான வாழ்க்கை தருவார் தங்கையே! உனக்கு ஓர் உண்மையை சொல்கிறேன்."

உமாமகேச்வரியான ஆதிபராசக்தியால் மனோவலிமை பெருகும். லட்சுமியால் செல்வம் சிறக்கும். ஸரஸ்வதியால் கல்வி உயரும். ஆனால்; குடும்பத்தில் கணவன் மனைவியருக்கு மிடையே ஸந்தோஷம்பெருகுவது ஸந்தோஷிமாதாவாலேயே நடக்கும். மூன்று தேவியர்களின் அருளைப் பெற்றுப் பிறந்தவள்தான் இந்தச் ஸந்தோஷிமாதா என்றாலும் அவளுக்கே இந்தச் சக்தி உரியதாக விளங்குகிறது. என்று அந்தப் பெண் கூறினாள்.

ஸந்தோஷிமாதாவின் விரத மகிமையைக் கேட்டுப் பக்திப் பரவசத்திற்கு ஆளான சுனீதி "அன்பு சகோதரி! தயவு செய்து ஸந்தோஷிமாதா விரதம் பற்றிய விவரங்களைக கூறினீர்களானால் எனக்கு மிகவும் உதவியாக இருக்கும்" என்று கூறினாள். சுனீதியைத் தன் அருகில் அமரச் சொன்ன அந்தப் பெண் விரதம் மேற்கொள்ளத் தக்க விவரங்கள் கூறினாள்.

தெய்வம் எல்லோருக்கும் பொதுவானது. ஆனால், சில தெய்வங்களுக்குச் செய்யும் விரதங்களுக்கு, பெரும் பொருட் செலவு ஏற்படும். ஸந்தோஷிமாதா விரதத்தைப் பரம ஏழை கூடச் செய்யலாம். அவ்வளவு எளிமையானது ஆனால், பலன் தருவதில் மிகவும் வலிமை மிக்கது. விரதத்தை வீட்டின் உள்ளேயோ, வீட்டுக்கு வெளியேயோ எங்கு வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் செய்யுமிடம் அமைதி உடையதாகத் தூய்மை

உடையதாக இருக்கவேண்டும். இந்த விரதத்தை வெள்ளிக்கிழமை தொடங்கலாம். ஸந்தோஷிமாதாவின் படம் ஒன்றை வாங்கி வந்து ஒரு பலகையில் · வைக்க வேண்டும். அதற்கு முன் விளக்கை ஏற்ற வேண்டும். ஒரு கலசத்தில் நீரை நிறைத்து, மாவிலைகள் வைத்து, அதன் மீது ஒரு தேங்காயை வைக்கவேண்டும். ஸந்தோஷிமாதாவிற்கு மிகவும் பிடித்த வறுத்த கடலையும் வெல்லமும் தான். அவரவர்களின் சக்திக்குத் தகுந்தவாறு வறுத்தகடலையும், வெல்லமும் வாங்கி ஸந்தோஷிமாதாவின் படத்திற்கு முன்னால் வைத்துக் கொள்ள வேண்டும். விரதத்தை ஆரம்பிக்கும் முன்னர் வறுத்தகடலையும், வெல்லத்தையும் எடுத்துக் கொண்டு சங்கல்பம் செய்ய வேண்டும். பிறகு ஸந்தோஷிமாதாவைப் பூஜைசெய்து கதையைச் சிரத்தையோடு படிக்க வேண்டும். அல்லது: படிக்கச் சொல்லிக் கேட்க வேண்டும்.

கதை முடிந்ததும் ஸந்தோஷிமாதாவைப் பற்றிய தோத்திரம் பாடலைப் பாடி ஆர்த்தி எடுக்க வேண்டும். பின் நைவேத்தியம் செய்து கலசத்தில் உள்ள நீரை தீர்த்தமாகத் தானும் உட்கொண்டு அனைவருக்கும் கொடுத்தபின், நீரை துளசிச் செடிக்கு ஊற்ற வேண்டும்." என்று கூறிய அந்தப் பெண் மேலும், சில விவரங்களைக் கூறினாள்.

பூஜையைக் காலையில் அல்லது மாலையில் தொடங்கலாம். பூஜை செய்யும் இடம் அமைதியுடையதாக இருக்க வேண்டும். பூஜையைத் தொடங்குமுன் சாப்பிடக் கூடாது. எதையும் முறையாக ஒழுங்காகப் பயபக்தியோடு செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் மாதாவின் அருள் விரைவில் கிட்டும். நாம் நினைத்த காரியம் முடிந்து விட்டால் விரதத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும். பூரி முந்திரிப் பருப்பு பாயஸம், கடலைப் பருப்பு இவற்றை நைவேத்தியம் செய்ய வேண்டும். அன்று அவசியம் தேங்காய் உடைத்துப் பூஜை பண்ண வேண்டும் பூஜை முடிந்ததும் எல்லோருக்[illegible] பிரஸாதம் [illegible]டுக்க வேண்டும். விரதம் பூர்[illegible] அன்று [illegible]டில் மச்சினர் பிள்[illegible] இருந்த[illegible]களுக்கு

உணவு படைக்க வேண்டும். இல்லையேல் வேறு எட்டுக் குழந்தைகளுக்குச் சாப்பாடு போட வேண்டும். அவர்கள் சாப்பிட்ட பின் கண்டிப்பாகத் தட்சணை கொடுக்கக்கூடாது. இவற்றில் மிக முக்கியம் என்னவென்ருல், விரதம் பூர்த்தியாகிற வரை ஒவ்வொரு வெள்ளிக்கிழமையயும் புளிப்புப் பதார்த்தம் சாப்பிடக்கூடாது. விரதம் பூர்த்தியாகிற அன்று புளிப்புப் பொருட்களைச் சாப்பிடாமல் இருப்பதோடு, யாருக்கும் கொடுக்கவும் கூடாது. "கொடுத்தால் விரதம் பங்கப்படும்" என்று அந்த அம்மாள் கூறினாள்

சுனீதி மன நிறைவோடு சந்நிதிக்குச் சென்று ஸந்தோஷிமாதாவை வணங்கி விட்டு அங்கிருந்த பெண்களிடம் விடை பெற்றுக் கொண்டு விறகுக் கட்டைத்தலையில் வைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

வீட்டிற்கு வரும் வழியிலேயே ஸந்தோஷிமாதா விரதத்தை எடுத்துக்கொள்வது என்ற முடிவிற்கு சுனீதி வந்தாள். விரதம் செய்வதற்கென்று மாட்டுக்கொட்டிலுக்குப் பக்கத்தில் அவள் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தாள். அடுத்து வந்த வெள்ளிக்கிழமையன்று அவள் விரதத்தை மேற்கொண்டாள்; நீராடினாள். ஸந்தோஷிமாதா படம் ஒன்றைப் பீடத்தின் மீது வைத்தாள். வறுத்த கடலையும், வெல்லமும் வாங்கி வந்தாள். அந்திப் பொழுது வந்ததும் விளக்கை ஏற்றினாள். கலசத்தில் நீரை ஊற்றித் தேங்காயை வைத்தாள். மாதாவின் பெயரைச் சொல்லிச் சங்கல்பம் செய்து கொண்டாள். தன் கணவன் விரைவில் வரவேண்டும். குடும்பத்தில் நிம்மதி பெருக வேண்டும்; என்று பூரிப்போடு பிரார்த்தித்தாள். பிறகு பூஜை செய்து பிரஸாதத்தை உண்டாள்.

ஒவ்வோரு வெள்ளிக்கிழமையும் சுனீதி தவருமல் விரதம் இருந்து வந்தாள்.

அவள் பக்திக்கு மாதா இரங்கினாள்.

உமாமகேச்வரியான பராசக்தி, லக்ஷ்மி, ஸரஸ்வதி இவர்கள் ஒன்று கூடிச்செய்த முடிவின்படி போலாநாத் சுனீதியை மறந்திருந்தான். இப்பொழுது ஸந்தோஷிமாதாவின் அருளால் மீண்டும் அவனுக்கு மனைவியின்

நினைவு வந்தது. அவனிருந்த மாதவன் பூரிலிருந்து வெளியூர் புறப்பட்ட ஒருவன் போலாநாத் சொல்லிச் சொந்த ஊரின் வழியாகச் செல்லுவதாகக் கூறினான். அவனிடம் சுனீதியை விசாரித்து வருமாறு போலாநாத் சொல்லி அனுப்பினான். அவன் மூன்றும் வெள்ளிக்கிழமை வந்து போலாநாத் விசாரித்து வரச் சொன்னதாக சுனீதியிடம் தகவலைக் கூறிச் சென்ருன். பின் ஆச்சரியமாக ஏழாம் வெள்ளிக்கிழமையன்று போலாநாத் கொடுக்கச் சொன்னதாகக் கூறி இருநூறு ரூபாய் வேறொருவன் கொடுத்துச் சென்ருன். அந்த ரூபாய்களை உடனே சுனீதி தன் மாமியாரிடம் மிகுந்த கனிவுடன் கொடுத்து விட்டாள்.

கணவனை நினைத்து சுனீதி மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். எப்போதும் ஸந்தோஷிமாதாவைத் துதித்த வண்ணமே இருந்தாள்.

சுனீதியின் மாமியாரும் மைத்துனர்களும், அவர்களின் மனைவிமார்களும் அவள் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருந்தபொழுது அவள்மீது பொருமைப்பட்டவர்கள், ஸந்தோஷப்படுகிருள் என்ருல் அவர்கள் எப்படிச் சும்மா இருப்பார்கள்? மிகவும் பொருமைப்படஆரம்பித்தார்கள். இழிவாகப்பேசினார்கள்; கொடுமையாக நடத்தினார்கள். இவற்றையெல்லாம் சுனீதி பொறுமையாக சகித்துக்கொண்டாள் அரக்கர்களிடம் அகப்பட்ட ஸீதாதேவி எவ்வாறு ராமபிரானையே நினைத்துக்கொண்டு ஸகல துன்பங்களையும் பொறுத்துக் கொண்டாளோ அதே போல.

ஸந்தோஷிமாதாவின் கோயிலுக்குச் சென்ருள். அவள் பாதங்களைப் பற்றிக்கொண்டாள். கண்ணீர் பெருக்கினாள் "தாயே, உன்னை நான் பொன்வேண்டும் பொருள்வேண்டும் என்ரு கேட்கிறேன்? என் கண் கண்ட தெய்வம் கணவன்வேண்டும் என்றுதான் மன்ருடுகிறேன் அவரோடு சேர்ந்து வாழும் பாக்கியம் வேண்டும் என்று தானே கெஞ்சுகிறேன்." என்று வேண்டினாள்.

ஸந்தோஷிமாதா மனம் இரங்கினாள். தூங்கிக் கொண்டிருந்த போதே போலாநாத்தின் கனவில்

தோன்றினாள். 'மகனே! நீ இங்குச் சுகமாக இருக்கிறாய்! ஆனால், உன் மனைவி அங்கு பெருந்துன்பங்களுக்கு ஆளாகி தவிக்கிறாள். உனக்குப் பணம், காசு, நவரத்தினங்கள் இவைகள் சொத்தாக இருக்கலாம். ஆனால், கற்புடைப் பெண்ணுக்குக் கணவன்தான் சகலசொத்து. உன் வரவுக்காக அந்த உத்தமி ஒவ்வொரு கணமும் ஏங்குகிறாள். நீயோ இங்குக் கவலையில்லாமல் தூங்குகிறாய்! நீ உடனே அவளிடம் செல்வாயாக" என்று தூண்டினாள்.

"கொடுத்த பணங்கள் வசூலாகாமல் இருக்கின்றன, முதலாளியோ ஊரில் இல்லை. நான் எப்படி உடனே போகமுடியும்" என்று போலாநாத் கேட்டான்.

"மகனே! மனமிருந்தால் மார்க்கமா இல்லை! நாளை முதல் காலையில் நீராடிவிட்டு, ஸந்தோஷிமாதாவான என் நாமத்தைக் கூறி நெய் விளக்கேற்றி விழுந்து வணங்கிப் பிரார்த்தனை செய், விரைவிலேயே உன் எண்ணம் பலிதமாகும்" என்று கூறித் தாய் மறைந்தாள்.

மறுநாள் எழுந்து இரவு கண்ட கனவைப்பற்றி மற்றவர்களிடம் அவன் கூறினான். அவர்கள் கனவு உண்மையாகுமா? என்று கூறி அவனை கேலி செய்தார்கள் என்றாலும் முழு நம்பிக்கையுடன் அவன் ஸந்தோஷிமாதாவை முறைப்படித் துதித்தான். பின்பு கடையில் அமர்ந்தான் வசூல் ஆகவேண்டிய தொகைகள் ஆச்சரியமாக வசூல் ஆயின. யாத்திரை சென்றிருந்த முதலாளி எதிர்பாராத நிலையில் வந்து சேர்ந்தார். அவன் ஊருக்கு போக விரும்புவதையறிந்து பெரும் பணமும் ஏராளமான பொருள்களும் கொடுத்தார். போலாநாத் ஊரை நோக்கிப் புறப்பட்டான்.

ஒரு வெள்ளிக்கிழமையன்று வழக்கம்போலச் சுனீதி காட்டிற்கு விறகு கொண்டுவரச் சென்றாள். தாயை வணங்கிவிட்டுக் கோயிலில் உட்காரும் பொழுதெல்லாம் தாயின் அரவணைப்பில் கிடைக்கும் ஆனந்தமே அவளுக்கு ஏற்பட்டு வந்தது.

அந்தச் சமயத்தில் ஆகாயத்தில் தூசி எழுவதை அவள் கண்டாள். இது எக்காரணத்தால் ஏற்படுகி-

றது? என்று மாதாவை நோக்கிக் கேட்டாள்.

"மகளே! உன் கணவன் வந்து கொண்டிருக்கிறான் கொண்டுவந்துள்ள விறகுகளை மூன்று கட்டுகளாகக் கட்டி ஒன்றை நதிக்கரையில் வைத்துவிடு. யாத்ரீகர்கள் அதைப் பயன்படுத்துவார்கள். உனக்கு நன்மைகள் பெருகும். இரண்டாவது கட்டை என் கோயிலிலே வை. வரும் உன் கணவன் இங்குத் தங்கி உணவு தயாரித்து உண்டு, பின் வருவான். இன்னொரு கட்டை நீ சுமந்து செல். உன் கணவன் வந்து வீட்டிற்குள் உள்ளே செல்லும் சமயம் பார்த்து விறகுச் சுமையைப் போட்டு விட்டு உன் மாமியாரை நோக்கி; "மாமி! நாள்தோறும் கொண்டு வருவது போலவே இன்றும் விறகு கொண்டு வந்திருக்கிறேன், வழக்கமாகக் கொடுக்கும் தவிட்டு ரொட்டியும், கொட்டாங்கச்சியில் தண்ணீரையும் கொடுங்கள்" என்று கேள் அதோடு உன் கணவன் வந்ததைக் காட்டிக் கொள்ளாமல் "இன்று நம் வீட்டிற்கு விருந்தாளி யார் வந்திருக்கிறார்கள், என்று கேள், நான் சொன்னவற்றை உன் மாமியாருக்குப் பயப்படாமல் தைரியமாகச் சொல். அதனால் உன் நிலையைக் கணவன் நன்கு புரிந்து கொள்வான். இதனால் உன் மீது உன் கணவனுக்கு அன்பும், அனுதாபமும், அக்கரையும் ஏற்படும்," என்று மாதா கூறினாள்.

அன்னை கூறியபடியே விறகுகளை மூன்று கட்டுகளாக்கிய சுனீதி ஒன்றை ஆற்றங்கரையில் வைத்துவிட்டு, இன்னொன்றை மாதாவின் கோயிலில் வைத்துவிட்டு, மற்றுமொன்றைத் தூக்கிக்கொண்டு ஊரை நோக்கிப் புறப்பட்டாள்.

போலாநாத் வரும் வழியில் ஸ்ரீ ஸந்தோஷிமாதா கோயிலில் தங்கி சுனீதி வைத்துச் சென்ற விறகை எடுத்து அவற்றைக் கொண்டு உணவு சமைத்துச் சாப்பிட்டு விட்டு ஊரை நோக்கிச் சென்றான்; வீட்டை அடைந்தான்.

அவன் வீடடுக்குள் நுழைந்த நேரம் பார்த்து சுனீதி வந்தாள். "மாமி! நாள்தோறும் கொண்டு வருவது போலவே இன்றும் விறகு கொண்டு வந்திருக்கிறேன்.

வழக்கமாகக் கொடுக்கும் தவிட்டு ரொட்டியும், கொட்டாங்கச்சியில் தண்ணீரையும் தாருங்கள்" என்று கூறியதோடு "இன்று நம் வீட்டிற்கு விருந்தாளி யார் வந்திருக்கிறுர்கள்? என்று கேட்டாள்.

உடனே கிழவி வெளியே வந்தாள். விருந்தாளியா; உன் கணவனல்லவா வந்திருக்கிறுன். விரைவாகச் சென்று புதிய அணிமணிகளையெல்லாம் அணிந்து கொள்" என்று கூறி அவசரப்படுத்தினாள்.

இந்த நிலையில் போலாநாத் வெளியே வந்தான்.

போலாநாத்துக்குச் சுனீதியை அடையாளமே தெரியவில்லை. யாரோ வேலைக்காரி என்று முதலில் அவன் நினைத்து விட்டான். தான் வெளியூர் புறப்படும் போது அவள் கையில் அணிவித்த மோதிரம் அவன் பார்வையில் பட்டது. உடனே சுனீதிக்கா இந்த நிலை? என்று எண்ணிக் கலங்கினான். கிழவி செய்வதறியாது திருடியைப் போல் விழித்தாள். பிறகு சுனீதியைப் பற்றித் தவருகச் சொல்ல முயன்றுள். போலாநாத் அதை நம்புவானா? பெற்ற மகனான தனக்கே எச்சில் உணவு படைத்தவளாயிற்றே என்று எண்ணிய அவன் அவள் பேச்சைப் பொருட்படுத்தாமல் வேறு ஒரு வீட்டுச்சாவியை அவளிடம் பெற்றுக் கொண்டு அவன் மனைவியை அழைத்துக் கொண்டு அங்கே சென்றுன்.

அவளை அன்போடு தழுவி ஆறுதல் கூறினான். கண்களில் வழிந்த நீரை துடைத்தான். "ஸ்ரீ ஸந்தோஷிமாதாவின் அருளால் நாம் ஒன்று சேர்ந்துவிட்டோம். இனிச் சகல ஸௌகர்யங்களோடும்" வாழ்வோம், என்று கூறித்தான் கொண்டு வந்த பொருள்களையெல்லாம் மகிழ்ச்சியோடு அவளுக்குக் காட்டினான்.

அந்த வீடு அரண்மனை போல ஆயிற்று. ஆனந்தமாக அவர்கள் அதில் வாழத் தொடங்கினார்கள்.

ஒருநாள் ஸ்ரீ ஸந்தோஷிமாதாவின் விரத மஹிமையைச் சுனீதி தன் கணவனிடம் விவரித்தாள். வரும் வெள்ளிக்கிழமை விரதத்தை நிறைவு (உத்யாபனம்) செய்வோம் என்று கூறினாள். அவன் விரதமஹிமையை உணர்ந்தான். நிறைவு செய்ய உடன் பட்டான்.

வெள்ளிக்கிழமையன்று விரதத்தை நிறைவு செய்யச் சிறப்பான ஏற்பாடுகளைச் சுனீதி செய்தாள். அன்று அந்த விழாவிற்கு மைத்துனர்களின் பிள்ளைகளைச் சாப்பிட அழைத்தாள். சுனீதியின் விரதத்தைப் பங்கம் செய்ய இது தான் தக்க தருணம் என்று அந்தப் பிள்ளைகளின் தாய்மார்கள் எண்ணினார்கள். எனவே அவர்கள் பிள்ளைகளிடம் போகும்போதே, 'நீங்கள் சாப்பிடும்போதே புளிப்புப் பண்டம் வாங்கி அங்கேயே சாப்பிட்டு விடுங்கள்" என்று அவர்கள் சொல்லி அனுப்பினார்கள்.

சுனீதி மைத்துனர்களின் பிள்ளைகளை வரிசையாக அமர்த்தி பூரி, பாயஸம், பருப்பு வகைகளைப் படைத்தாள். அவற்றை வயிறு புடைக்கத் தின்ற அவர்கள் "இனிப்பை அதிகமாகத்தின்றுவிட்டோம். புளிப்புப்பண்டம் ஏதாவது கொடுங்கள்" என்று அடம்பிடித்தார்கள் அவர்களைச் சுனீதி சமாதானப்படுத்தினாள். பிறகு தட்சிணைப்பணம் வேண்டும் என்று பொல்லாத பிள்ளைகள் கேட்டார்கள். தட்சிணைப்பணம் கொடுக்கக் கூடாது என்பதை மறந்து விட்ட சுனீதி உடனே அவர்களுக்குத் தட்சிணைப் பணம் கொடுத்தாள். அதை வாங்கி அந்தப் பையன்கள் உடனே கடைக்குச் சென்று பணம் கொடுத்துப் புளியம் பழம் வாங்கிவந்து சுனீதி உத்யாபனம் செய்த இடத்திலேயே சாப்பிட்டார்கள். இதனால் சுனீதி பெரும் பயத்திற்கும், கலக்கத்திற்கும் ஆளானாள்.

இந்த நிகழ்ச்சிக்கு ஏற்ப மறு நாள் அவ்வூர் அரசனிடம் போலாநாத்தை அழைத்துச் சென்ருர்கள். "உன் கணவன் வெளியூரில் பொருட்களைத் திருடிக்கொண்டு வந்துவிட்டான். அதனால்தான் அரசர் அழைத்துப் போயுள்ளார் சரியான தண்டனை கிடைக்கும்" என்று சுனீதியின் மைத்துனன்மார், மனைவிகள் அவளைப் பெரிதும் பயமுறுத்தினார்கள்.

திக்கற்றவர்களுக்குத் தெய்வம்தானே துணை. "திக்கற்ற நிலையை அடைந்துவிட்டோமோ? கணவனுக்கு என்ன நேருமோ" என்ற கலவரத்திற்கும் ஆளான சுனீதி ஸந்தோஷிமாதா கோயிலுக்கு ஓடினாள். மாதா-

வின் கால்களைப் பற்றி கொண்டாள். 'தாயே நான் ஏதாவது தவறு செய்திருந்தால் மன்னித்துவிடு; நான் ஒன்றுமறியாத பேதை; என்று கதறினாள்.

ஸந்தோஷிமாதா பிரஸன்னமானாள். பெருங் கோப கொண்டு சீறினாள். "மகளே! நீ என் விரதத்தைப் பங்கம் செய்து விட்டாய்! அந்தப் பிள்ளைகள் பணம் கேட்டபோது நீ கொடுத்திருக்கக் கூடாது. கொடுத்ததால் தானே அவர்கள் புளிப்பைத்தின்று விரதத்தின் புனிதத்தைக் கெடுத்து விட்டார்கள் என்று மாதா கேட்டாள்.

"தாயே! நான் அறியாமை நிறைந்தவள். உன் விரதத்தைச் செய்கிற அளவுக்கு ஞானம் இல்லாதவள். குழந்தையின் கை கண்ணில் பட்டு விட்டால் வெட்டியா எறிவார்கள்? அதைப் போலப் பேதை நான் செய்த தவற்றைப் பொறுத்தருள்வாயாக. மீண்டும் நான் முறைப்படிச் செய்து (உத்யாபனம்) விரதத்தை முடிக்கிறேன்" என்று கெஞ்சினாள்.

சுனீதியின் கள்ளங்கபடமற்ற பக்தியைக் கண்டு ஸந்தோஷிமாதா மிகவும் மனம் இரங்கினாள். "மகளே! உன் பக்தியை மெச்சுகிறேன். உனக்கு எந்தத் தீங்கும் நேராது. உனக்கு நான் என்றென்றும் துணையாய் இருப்பேன்" என்று கூறினாள்.

சுனீதி பெருமகிழ்ச்சியோடு மனநிறைவோடு வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். போலாநாத்தும் பெரு மகிழ்ச்சியோடு தன் வீடு வந்தான், வெளிதேசம் சென்று பெரும் பொருள் தேடிவந்ததைச் சிறப்பித்து. அரசன் அவனுக்கு ரத்தின மோதிரத்தைப் பரிசாக கொடுத்திருந்தான்.

சுனீதி மைத்துனன்மார் குழந்தைகள் விரதத்தைப் பங்கம் செய்ததைப் பற்றிக் கூறினாள். சுனீதியின் யோசனைப்படி அடுத்த வெள்ளிக் கிழமை ஸந்தோஷிமாதா விரதத்தைப் பூர்த்தி செய்யும் விழாவைச் சிறப்பாகப் கொண்டாடுவது என அவர்கள் முடிவு செய்தார்கள்.

வெள்ளிக்கிழமை வந்தது. விருந்துக்கு எந்தப் பிள்ளைகளை அழைப்பது என்று சுனீதி சிந்தித்தாள்.



எந்த உருவத்தில் வந்தாலும் தாயைச் சேய் அறிந்துகொள்ளும்

ஆகவேண்டும்? கிழவியும் அவள் மருமக்கள்மார்களும் பிள்ளைகளும் மாதாவின் காலடியில் விழுந்து மன்னிப்புக் கேட்டார்கள்.

மாதா அவர்களை மன்னித்தாள். "நல்லார் ஒருவருகாகப் பெய்யும்மழை எல்லோருக்கும் பயன்படுவது போல" நான் என் பரம பக்தையான சுனீதியின் பொருட்டே இங்கு வந்தேன். பாவிகளான நீங்களும் அந்தப் புண்ணியவதியால் என்னைத் தரிசிக்கும் பேறுபெற்றீர்கள். இனி எந்த வேறுபாடுமில்லாமல் வாழுங்கள் "ஒற்றுமையாக வாழ்வது தான் உயர்வதற்கு வழி" என்று கூறிய ஸந்தோஷிமாதா தன் கையிலிருந்த குழந்தையைச் சுனீதியிடம் கொடுத்து ஆசீர்வதித்தாள். பின் அழகுத் திருவுருவோடு அனைவருக்கும் காட்சி கொடுத்து மறைந்தாள்.

சுனீதியும், போலாநாத்தும், அவர்கள் குழந்தையும் எல்லா நலனும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்தார்கள்.

ஸ்ரீ ஸந்தோஷி மாதாகீ ஜய்

கயிலை மலையில் நாரதப்பெருமான் விநாயகப் பெருமானைச் சந்தித்து வணங்கினார்.

"வினை தீர்க்கும் விக்னேச்வரா! மண் உலகெங்கும் உங்கள் மகளான ஸந்தோஷியின் புகழ் நாளும் பெருகுகினறது; அவள் பரமபக்தர்களான சுனீதியும் போலாநாத்தும் போல தனது பக்தர்களுக்குச் சகல ஐச்வர்யங்களையும் தந்து வாழ வைக்கிருள்" என்று மிகுந்தமகிழ்ச்சியோடு கூறினார்.

நாரத முனிவரே! என் மகள் ஸந்தோஷியைத் துதிப்பவர்களும், அவள் கதையைப் படிப்பவர்களும், கேட்பவர்களும் சகல ஐச்வர்யங்களையும் அடைவார்கள். என் மகள் அவர்கள் அனைவரையும் காத்து அருள்புரிவாள்" என்று விநாயகர் கூறினார். நாரத முனிவர் நாயகனான விநாயகனை வணங்கி விடைபெறும் பொழுது ஸந்தோஷி மாதாகீ ஜய்' என்று குரல் எழுப்பிப் புறப்பட்டார்.

ஸந்தோஷி மாதாவின் அருளால் சகல மக்களும சகல ஐச்வர்யங்களையும் அடைவார்களாக.

## ஸ்ரீ ஸந்தோஷி மாதாகீ ஜய்

சுபம்

# நூற்றெட்டுப் போற்றிகள்

ஸந்தோஷி மாதா போற்றி
சகலமும் அருள்வாய் போற்றி
வேதங்கள் துதிப்பாய் போற்றி
வெற்றிகள் தருவாய் போற்றி
கன்னியிற் சிறந்தாய் போற்றி
கற்பகத்தருவே போற்றி
கருணை கடலே போற்றி
காரணத்தினுருவே போற்றி
காரியமும் ஆனாய் போற்றி
கரசித்தலமுறைவாய் போற்றி

கதை கேட்டு மகிழ்வாய் போற்றி
கால தேசம் கடந்தாய் போற்றி
கஜமுகன் குழந்தாய் போற்றி
முக்குண உறுவே போற்றி
மூவுலகிற் சிறந்தாய் போற்றி
இனியறின் உருவே போற்றி
இனிப்பினை விரும்புவாய் போற்றி
வாட்டமிலா முகத்தாய் போற்றி
வரம் மிகத் தருவாய் போற்றி
அகர முதல எழுத்தே போற்றி

ஆதி அந்தமில்லாய் போற்றி
ஈடிணையற்றாய் போற்றி
இணையடி தொழுதோம் போற்றி
கோரியது கொடுப்பாய் போற்றி
குலம் காக்கும் சுடரே போற்றி
விரதத்திற்கு உரியாய் போற்றி
விளக்கத்தின் விளக்கம் போற்றி

பிறப்பு இறப்பு அற்ருய் போற்றி
பிறப்பினைத் தருவாய் போற்றி
பெருவாழ்வு அருள்வாய் போற்றி

பிழைகளைப் பொறுப்பாய் போற்றி
வணக்கத்திற் குரியாய் போற்றி
வணங்கினால் மகிழ்வாய் போற்றி
ஒலிக்குமோர் ஓசை போற்றி
உயர்வுகள் தருவாய் போற்றி
கோள்களும் போற்றப் போற்றி
குறைகளைத் தவிர்ப்பாய் போற்றி
நிறைவினைத் தருவாய் போற்றி
சக்தியின் உருவே போற்றி
ஸரஸ்வதி ஆனாய் போற்றி

திருமகள் உருவே போற்றி
தெய்வத்தின் தெய்வம் போற்றி
குலத்தைக் கொண்டாய் போற்றி
வாஸனை ஏற்ருய் போற்றி
தீமைகளை அழிப்பாய் போற்றி
திசைகளெட்டும் நிறைந்தாய் போற்றி
அற்புத உருவே போற்றி
ஆனந்த சிலையே போற்றி
தாமரை அமர்ந்தாய் போற்றி
தக்கன் தருவாய் போற்றி

தருமத்தின் உருவே போற்றி
தாயாக வந்தாய் போற்றி
நினைத்ததைத் தருவாய் போற்றி
நிம்மதி அருள்வாய் போற்றி
உமையவள் பேத்தி போற்றி
உன்னதத் தெய்வம் போற்றி
செல்வத்தின் உருவமே போற்றி
ஜெகமெல்லாம் காப்பாய் போற்றி
உயிருக்கு உயிராவாய் போற்றி

உலகமெலாம் நீயே போற்றி

ஆபரணமணிவாய் போற்றி
ஆடைகள் தருவாய் போற்றி
ஒளிமிகு முகத்தாய் போற்றி
கருணை சேர் கரத்தாய் போற்றி
மனைவிமக்கள் ஈவாய் போற்றி
மங்களம் தருவாய் போற்றி
உன்னையே துதித்தோம் போற்றி
உடமைகள் தருவாய் போற்றி
நங்கையர்க்கு நாயகி போற்றி
நலமெலாம் தருவாய் போற்றி

ஆரத்தி ஏற்பாய் போற்றி
ஆனந்த உருவே போற்றி
பாடல்கள் கேட்டாய் போற்றி
பாசத்தைப் பொழிவாய் போற்றி
குணமென்னும் குன்றே போற்றி
குன்றென அருள்வாய் போற்றி
தேவியர் தேவி போற்றி
தரிசனம் தருவாய் போற்றி
சிவனருள் பெற்ருய் போற்றி
சிறப்பெலாம் கொண்டாய் போற்றி

விஷ்ணுவருள் பெற்ருய் போற்றி
விண்ணவர் போற்றப் போற்றி
நான் முகன் கருணை பெற்ருய் போற்றி
நலன்களின் உருவம் நீயே போற்றி
போற்றிக்கு அருள்வாய் போற்றி
புண்ணிய நாயகி போற்றி
செல்வத்தின் உருவே போற்றி
செல்வத்தைப் பொழிவாய் போற்றி
சரணமடைந்தால் மகிழ்வாய் போற்றி
சற்குணவதியே போற்றி

ஐங்கரன் மகளே போற்றி
அனைத்துமே நீதான் போற்றி
கண்களின் ஒளியே போற்றி
கனக மாமணியே போற்றி
அன்பருக்கு அன்பே போற்றி
அனைவருக்கும் அருள்வாய் போற்றி
செல்வமாம் நிதியே போற்றி
செல்வத்தின் பதியே போற்றி
தத்துவமானாய் போற்றி
வித்தகச் செல்வி போற்றி 100

பழங்களை ஏற்பாய் போற்றி
பாயஸம் உண்பாய் போற்றி
வெல்லம் கடலை சேர்த்து
விருப்பமாய் உண்பாய் போற்றி
குடும்பத்தில் நலன்கள் தந்து
கொலுவிருந் தருள்வாய் போற்றி
ஓம்கார உருவே போற்றி
உன்னதத் தெய்வம் போற்றி
ஸந்தோஷி மாதா போற்றி
ஸௌபாக்கியம் அருள்வாய் போற்றி 108

ஸந்தோஷிமாதாகி ஜய்!

## ஜய ஜய ஸந்தோஷி மாதா

ஜய ஜய ஸந்தோஷிமாதா! ஜய ஜய ஸந்தோஷிமாதா!
செல்வங்கள் அனைத்தையும் எங்களுக்களித் திடும்
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
அழகிய ஆடையும் ஆபரணங்களும்
அன்புடன் அணிவாய் மாதா நீயே
இரத்தின ஒளிதான் உன் உடல் தாயே
இரக்கம் மிகக் கொண்டு அருள் செய்வாயே
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)

தாமரை மலர் போல் சிவந்த உன் முகமும்
மங்களமான உன் மந்தகாசமும் கண்டு
மூவு லகத்தார் மனமும் மோகிக்கும் தாயே
பூவுலகெங்கும் உனக்கிணை நீயே
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
சொர்ண சிம்மாசனத்தில் நீ அமர்ந்திருக்க
சுந்தரி உனக்கு வீசுவேன் சாமரம்
தூபமும் தீபமும் தேனும் பழமும்
துதித்து நான் உனக்குச் செய்வேன் நிவேதனம்
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
வெள்ளிக் கிழமையே விரதத் திருநாள்-உன்
வீரக்கதை கேட்கவும் அதுவே நன்னாள்
வெல்லமும் கட்லையும் பிடித்தவை உனக்கே
வெற்றியைத் தருவதால் ஸந்தோஷி நீயே!
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
கோயில் எங்கும் பளிச்சென ஒளிவீச
மங்கள வாத்தியம் எங்கும் முழங்கும்
சிறுவர் சிறுமியர் உன்னடி பணிவார்
சிறப்புகள் தருவாய் ஜகன்மாதா நீயே!
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
பக்திமிக்க எங்கள் பூஜையை ஏற்பாய்
பக்தர்கள் எங்கள் எண்ணத்திற்கு அருள்வாய்
ஏழை எளியோர் துயர்தனைத் துடைப்பாய்
இல்லங்கள் தோறும் தானியம் தருவாய்
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)
தியானத்தால் பெரும் பலன்கள் நேரும் உன்
திருக்கதை கேட்டாலே நினைத்தது கைகூடும்
ஸ்ரீ ஸந்தோஷிமாதா உனக்கு ஆரத்தி எடுப்போம்
ஸகல சம்பத்தும் பெறுவோம் உறுதியம்மா!
(ஜய ஜய ஸந்தோஷிமாதா!)

-:O:-

## அன்னைக்கு நிவேதனம் செய்யும்போது பாட வேண்டிய பாடல்

அன்னையே புசித் தருள்வாயே
அன்புடன் புசித் தருள்வாயே
இனிய பண்டங்களை ஏற்றருள்வாயே
ஏற்றமிகு பூர்ணேச்வரீ புசித்தருள் வாயே
(அன்னையே)

பால்பாயஸம் தருவேன் அன்புடன்
விண்ணப்பம் பல செய்வேன் உன்னிடம்
கருணையும் கம்பீரமும் நிறைந்தாய் நீயே
வறுத்த கடலையும் வெல்லமும் ஏற்பாயே
(அன்னையே)

வெள்ளிககிழமை உனக்கேற்ற நாளே
வெற்றியைத் தரும் கதை மிகவும் மேலே
மனத்தில் உன் எண்ணம் மகிமை கொண்டது
மங்கள நாயகி உன் மகத்துவம் வென்றது
(அன்னையே)

## பஜனை செய்யும்போது பாட வேண்டியது

துணை புரிவாய் துணைபுரிவாய் ஸந்தோஷிமாதா
தூயவளே நாயகியே ஸந்தோஷிமாதா
எண்ணமெல்லாம் நிறைவேற இனிதருள்வாயே
இகலோக நாயகியே ஸந்தோஷிமாதா
(துணைபுரிவாய்)

நெருப்புப்பட்ட பூப்போல வாடுகின்றோமே
நிம்மதியை உடன் தருவாய் ஸந்தோஷிமாதா
கோபம் கொள்ளல் நியாயமில்லை ஸந்தோஷிமாதா
குணக்குன்றே சுடர்விளக்கே ஸந்தோஷிமாதா
(துணைபுரிவாய்)

எப்போது நீ வருவாய் ஸந்தோஷிமாதா
என் இனியகதை கேட்டிடுவாய் ஸந்தோஷிமாதா
அற்புதங்கள் புரிந்திடுவாய் ஸந்தோஷிமாதா
ஐங்கரனின் திருமகளே ஸந்தோஷிமாதா
(துணைபுரிவாய்)

## ஆரத்திப் பாடல்

ஆரத்தி எடுப்போம் ஆரத்தி எடுப்போம்
அன்னை ஸ்ரீ ஸந்தோஷிமாதாவுக்கு
(ஆரத்தி எடுப்போம்)
அதிகக் கருணை பொழியுதே தாயின் கண்கள்
அன்பை மிகப் பொழியுதே தாயின் கண்கள்
(ஆரத்தி எடுப்போம்)
உயர்ந்த கண்களை உற்று நோக்குவோம்
ஒவ்வோரு கணமும் புதிய ஒளியைக் காணுவோம்
(ஆரத்தி எடுப்போம்)
சதா கேட்கும் ஜய ஜய ஒலிதான்
அன்னையின் கோயிலிலே
ஸர்வ ஜனங்களும் கூடி அழைப்பர்
அன்னையின் கோயிலிலே
தீபம் தாங்குவோம் தூபம் தாங்குவோம்
அன்னையின் கோயிலிலே
தீமைகள் அகலும் வாய்மைகள் பெருகும்
அன்னையின் கோயிலிலே
ஆரத்தி எடுப்போம் ஆரத்தி எடுப்போம்
அன்னையின் கோயிலிலே
ஆனந்தம் அடைவோம் ஆனந்தம் அடைவோம்
அன்னையின் கோயிலிலே

## விரதத்தை ஏற்பாய்

விரதத்தை ஏற்பாய் வெற்றிதருவாய்
ஜய ஜய ஸந்தோஷிமாதா
கலியில் சிக்கிய என்னைக் கரையேற்ற வருவாய்
உன் தர்பாரில் வந்து தொழுது நிற்கின்றேன் நானே
உன் அருள் குழந்தை ஏன் அழவேண்டும்
உடன்வருவாய் தாயே
என் தலை விதிகளையே ஒரு கணத்திலே மாற்றிடுவாயே
(விரதத்தை ஏற்பாய்)
அனைத்து வழிகளும் அடைபட்டுள்ளன தாயே
அக்கினிபோலே துன்பங்கள் வாட்டுது என்னையே
துர்பாக்கியம் என்னும் அவற்றை நீக்கிடுவாயே
நற்பாக்கியங்கள் அனைத்தும் தந்து ஆட்கொள்வாயே
(விரதத்தை ஏற்பாய்)

# ஸந்தோஷி மாதாகி ஜய்

-:o:-

ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதா!
ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதா!
ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதா!
ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதா!
வரம் தர வேண்டும் அம்மா ;

அம்மா, நிதம் உன்னைத் தொழுகின்றோம்.
அம்மா, நிதம் உன்னைத் தொழுகின்றோம்
கணபதிமகள் உன்னை நாடியே வந்தோம்
துணை உந்தன் பொற்பதமே!
(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)
சிவந்த உன் திருமுகம் செந்தாமரையோ!
இருள் வழி அருள் மொழியோ!
அம்மம்மா அழகின் கொலுவறையோ
வெள்ளிக்கிழமை நோன்பு தொடங்குகிறோம்
மஞ்சள் குங்குமம் தா
(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)
விளக்கினையேற்றி உன்புகழ் போற்றி
வினாயகனைத் தொழுவோம்
அவனின் குமரியை இனி மறவோம்!
கலச ஜலம் அதைத் தூவித் தெளித்தோம்
துளசியைப் பூஜித்தோம்!
(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)
பாயசம் வைத்தோம் புளியை மறுத்தோம்
குழந்தைகளை அழைத்தோம்!
எட்டுபேர் விருந்துண்ணவே படைத்தோம்
எல்லோரும் கேட்க உன் கதை படித்தோம்
இல்லத்தில் இருந்திடம்மா!
(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)



கடலையும் வெல்லமும் வினியோகித்தோம்
கவலைகள் தீர்த்திடம்மா!
உந்தன் கடைக்கண் பார்த்திடம்மா!
விரதம் முடித்தோம் ஆரத்தி எடுத்தோம்
கேட்டதைக் கொடுத்திடம்மா

(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)

பவழம் இதழ்கள் முல்லை மலர்கள்,
சிரிப்பினிலே மயங்குகிறோம், அம்மா
சிரிப்பினிலே மயங்குகிறோம்.
பளிங்குபோல் உள்ளம், உருவமும் பளிங்கு
புனிதம் உன் பார்வையம்மா!

(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)

வரம் தர வேண்டும் அம்மா!
அம்மா, நிதம் உன்னைத் தொழுகின்றோம்
கணபதிமகள் உன்னை நாடியே வந்தோம்
துணை உந்தன் பொற்பதமே!

(ஓம் ஸ்ரீ ஸந்தோஷி மாதாவே)

-:0:-

## ஸ்ரீ ஸந்தோஷிணீ மாது:
## ப்ராத: ஸ்மரண பஞ்சரத்னம்

ப்ராத: ஸ்மராமி நிஜபாத நதஸ்ய ஜந்தோ:
ஸர்வேஷ்ட பூரண நிஜவ்ரத மாநநீயாம் ।
விச்'வைக வந்த்ய நிஜபாத ஸுபங்கஜாம் தாம்
ஸந்தோஷி மாதரமலும் வரதாம் வரேண்யாம் ॥ 1

ப்ராதர்நமாமி ஸகலஸ்ய ஹி பாரதஸ்ய
ஸர்வேப்ஸித ப்ரத மஹா மஹிமோஜ்வலாம் தாம் ।
ஸ்ரீ சங்கசக்ர வர பத்மஸுபாத ரேகாம்
ஸந்தோஷி மாதரமலும் மஹிதாம் ச'ரண்யாம் ॥ 2

ப்ராதர் வதாமி கமலா வரதா சு வாணீ
கௌரீ ஸ்வரூபமுபகம்ய விராஜமானாம் ।
ஸந்தோஷமாது ரகிலேஷ்ட பலப்ரதாத்ரு
மாஹாத்ம்யமேவ விதிதம் ஜகதம்பிகாயா: ॥ 3

ப்ராத: ச்'ருணோமி நிகிலாவநி பக்த வர்க
ஸந்தோஷ பாக்ய விபவா(அ)பய தான சௌ'ண்டம் ।
ஸர்வஸ்வ தான நிபுணாம் ஸுகதா விசே'ஷம்
ஸந்தோஷமாதுரதிகாதிக பக்தி பூர்ணம் ॥ 4

ப்ராத: படாமி நிகிலாவநி கேயமாநம்
ச்ரேய: ப்ரதம் ச்'ரித ஜனாவந ஜாகரூகம்! ।
ஸாஹஸ்ர நாம ச்'தநாம ஸுகீத ஜாதம்
ஸந்தோஷிமாது: அகிலாண்ட மனோஹராயா: ॥ 5

மத்யப்ரதேச' கிரிச்'ருங்க நிகேதனாயா:
ஸந்தோஷிமாது: அதிகாதிக பாக்யதாயா: ।
ஸ்ரீ பஞ்சரத்னமித மாதரத: படேத்ய:
ஜீயாத் ஸ ஸர்வ விஜயீ ஸுதநீ சிராயு: ॥ 6

இதி ஸ்ரீ ஸந்தோஷிணி மாது: ப்ராத: ஸ்மரண
பஞ்சரத்ன ஸ்தோத்ரம் ஸமாப்தம்.

-:O:-

## ஸ்ரீ ஸந்தோஷிணீ மாது: ஸுப்ரபாத ஸ்தோத்ரம்

விக்னேச்வரஸ்ய மஹிதாகில ஸித்தி புத்தி
புத்ர த்வயஸ்ய பகினீ கில யா பபூவ ।
துர்கா ரமா மஹித வாணி மஹா ஸ்வரூபா
ஸந்தோஷிணீ பகவதீ ச'ரணம் மமாஸ்து ॥ 1

ஸர்வத்ர சா'ந்தி குருபக்தி தயா ப்ரபூர்ணே
ஸந்தோஷ நித்ய ஸுஜனே வரமத்ய தேசே' ।
உத்துங்க சைல ரமணீய நிஜாலயே(அ)த்ய
ஸந்தோஷ நித்ய ஜனனீ ஜனனீ சகாஸ்தி ॥ 2

யாம் வை ஸ்துவந்தி ஸுஜனா: பரச்'க்திரூபாம்
ச'க்தி த்ரயாத்மக தநூம் தனதான துஷ்டாம் ।
ஸந்தோஷ பூர்ண ஹ்ருதயாம் ஸ்மரணாதபீஹ
ஸந்தோஷ மாதரம் அமூம் ப்ரணமாமி மூர்த்னா ॥ 3

ஸவஸ்யைவ ஸோதர க்ருதே ஸஹஜாஹி கன்யா
ரக்ஷா ஸ்பந்தன மஹோ குருதே தயாட்யா ।
தத்கர்ம கர்துமிபவக்த்ர க்ருபாலவேன
ஸந்தோஷிணீ ஸுஜனிமாப ஹிமாலயே(அ)ஸ்மின் ॥ 4

ஆநந்த நித்ய நகரே வஸதி ஸ்ம பூர்வம்
கோபால நாத இதி விச்ருத வைச்யவர்ய: ।
தஸ்யாத்மஜா ச குருதைவத பக்தி பூர்ணா
நாம்னா ஸுநீதி ரபவத் ஸுகுணா ஸுரூபா ॥ 5

தஸ்யாந்திகே ஸுமஹதி ஸநகந்தவாடி
தஸ்யாம் நிவாஸமகரோத் பஹுபுத்ரிணீஸா ।
புத்ரேஷு சைவ சரமோ பலபோலநாதோ
வவ்ரே ஸுநீதிமதுலாம் நிஜபூர்வ புண்யாத் ॥ 6

பக்த்யா ஸுநீதி பலபோல ஸுநாதயோச்ச
ஸ்ரீ சுக்ரவார பரிபூஜன துஷ்ட சித்தா ।
சோகாபநோத பஹுபாக்ய ஸுதான நித்யம்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 7

கல்யாண நித்ய ஜனனி கலிகல்மஷக்னீ
காமப்ரபூரணபடோ கருணார்த்ர சித்தே ।
ஸ்ரீ கட்கசூல கமனீய புஜத்வயே(அ)ம்ப
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 8

ஸந்தப்த காஞ்சனமயீ ஸகலேஷ்டதாத்ரீ
ஸம்பூர்ண நைஜவிபவா ஸகலாகமேட்யா ।
ஸம்பத்ப்ரதா ச ஸஹஸரா நிஜ பக்த வர்கே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 9

பாக்யப்ரதே பயஹரே பவரோக வைத்யே
பத்ரப்ரதே பகவதி பஜதாம் ஜனானாம் ।
சத்ருக்ஷயைக நிரதே ச்ரித காமதேனோ
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 10

ஸ்ருஷ்டி ஸ்த்திதி ப்ரளய காரிணி சூல ஹஸ்தே
ஸிம்ஹாஸனஸ்த்தித மனோஹர ராஜ்யலக்ஷ்மீ ।
ராராஜமான ரமணீய ஸுரத்ன பூஷே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 11

க்ஷிப்ர ப்ரஸாத நிரதே க்ஷமிதாகிலாகே
க்ஷேமங்கரீ க்ஷிதி தரேந்த்ர ஸுவம்சகேதோ ।
அக்ஷீண புண்ய விபவை: பரிசிந்த்யமானே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 12

ஆரத்தார்த்தி வாரண படோ ஹ்ரயணிமாதி வந்த்யே
அவ்யாஜ பூர்ண கருணா வருணாலயேத்வம் ।
அஸ்தோக பாக்ய விபவ ப்ரத நைஜ சித்தே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 13

துரகா தவமேவ துரிதௌக வினாச சீலா
லக்ஷ்மீஸ் த்வமேவ நவரத்ன ஹிரண்ய தாத்ரீ ।
ஸாரஸ்வத ப்ரதசனா ச ஸரஸ்வதி த்வம்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 14

த்வம் ஸாந்த்ர நைஜ ஹ்ருதயா ஸுசரண்யமூர்த்தி:
த்வம் விக்ன வாரணபரா ச வரேண்ய மூர்த்தி: ।
வைரி ப்ரணாசனவிதௌ வர வீரமூர்த்தி:
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 15

வித்யா ப்ரதான ஸமயே வரசுக்ல வஸ்த்ரா
லக்ஷ்மீ ப்ரதான ஸமயே நவரக்த வஸ்த்ரா ।
வித்வேஷி வர்க தலனே ச தமால நீலா
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 16

ஸ்ரீ வீரவர்ய பரமாஸன நித்ய ஜுஷ்டே
விக்யாதி தே விஜயதே விபதாம் நிஹந்த்ரீ ।
வந்தாரு லோக நவகான ஸுதுஷ்ட சித்தே
ஸௌபாக்ய மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 17

த்வம் பீஷயஸி அகில துர்சுகவர்கமேவ
த்வம் தோஷயஸி அகிலபக்த ஸமூஹமேவ ।
த்வம் தாபயஸி அகில ஸம்பதம் ஆசுநித்யம்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 18

ஆஸேது ஹைம கிராவதி வந்த்யமானே
ஆபாலவ்ருந்த மநுஸந்தய முபாஸ்யமானே ।
ஆபாதசூட மகிலாபரணோ ஜ்வலாங்கே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 19

காஷ்ட்டேந ஜீவன பரஸ்ய ச கோமயைகே
க்ருத்யஸ்ய பக்த ஸுஜனஸ்ய ஸுபாக்யதாத்ரீ ।
வித்ராவணீ ச நிஜ பக்த ஸுமாதரம் த்ராக்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 20

ஸம்வர்தினீ த்வமஸி ஸர்வ ஸுமங்களானாம்
ஸம்பூரணீ ச ஸகலேஷ்ட மனோரதானாம் ।
ஸம்ரோதினீ ச விபதாமபி நித்ய பக்தே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 21

ஸம்சோஷினீ ச விஷ ஸர்ப பயம் நதானாம்
ஸந்தாயினீ ச ஸததம் ஸுநராதிபத்யம் ।
ஸம்ரக்ஷணீ ச நிஜபக்த ஜனாந் ஸதாபி
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 22

சோகாபனோதனபரே நிஜபக்த ப்ருந்தே
ரோகாபஹார சதுரே நிஜபாத நம்ரே ।
பாக்ய ப்ரதைக நிரதே நிஜ பூஜகேப்ய:
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 23

யோ பார்கவஸ்ய ஸுதினே தவ நித்ய பூஜாம்
பக்த்யா கரோதி சுபகோமய லிப்த கேஹே ।
கோபிச் ரௌப்ய ஸுஹிரண்ய ஸுதான்யராச்யா
பூர்ணம் கரோஷி தயயா தவ ஸுப்ரபாதம் ॥ 24

தாரித்ர்ய துக்க பரிதம் துரிதாதி ரேகாத்
த்வாமேவ பூஜன பரம் ப்ருகுவாஸரேஷு ।
லக்ஷாதிபம் ப்ரகுருஷே கருணார்த்ர த்ருஷ்ட்யா
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 25

ஸ்ரீ மாதவாக்ய ஸுபுரே பஹுசோர ஸங்கான்
வித்ராவ்ய தஸ்ய தனரக்ஷண துஷ்டவைச்யாத் ।
உத்யோகமாப்ய ஸுதநீ ஹி பபூவ பக்த:
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 26

இத்யேவ நாரத முகேரிதமாப்த பாக்யா:
ஸந்தோஷ மாதுரகிலாம் ஹி கதாம் படந்து ।
ஸர்வஸ்வ பூர்ண பவனா: நிவஸந்து ஸௌக்யாத்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 27

ஸூர்ய: சசி குஜ புதௌ குருசுக்ர மந்தா:
ராஹுச்ச கேதுரபரே திதிலக்ன தாரா: ।
ஆஜ்ஞா ப்ரதீக்ஷணபரா: தவ பக்த ரக்ஷா
தக்ஷா பவந்தி தவ மங்கள ஸுப்ரபாதம் ॥ 28

த்வாம் வை நதாச்ச ஸஹஸா நிதினா பவந்தி
புண்யார்த்தினச்'ச பஹுபௌத்ர ஸுநப்த்ரு பூர்ணா: ।
ப்ராஸாதவாஸமபி தே க்ருபயா லபந்தே
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 29

ச்ருண்வந்தி யே தவ து புண்யகதாம் ஹி மர்த்யா:
யே வா படந்தி ச முதா கில பாடயந்தி ।
லக்ஷ்ம்யஷ்டகம் ஹி ஸஹஸா ஸமநுப்ரவிஷ்டம்
நைவாபயாதி பவனாத் ததிதம் ஹி ஸத்யம் ॥ 30

நாக்னௌ ஜலே வியதி நாபி ச பூமி பாகே
நைவாபத் அஸ்தி பதி சோர பயம் ந சைவ ।
ந்யாயாலயே(அ)பி விஜய: தவ பூஜகானாம்
ஸந்தோஷ மாதுரதுனா தவ ஸுப்ரபாதம் ॥ 31

ய: ஶ்ரீ தனானி விவிதாநி ச தான்ய ராஶிம்
தைர்யம் தியம் ஸுஸுதமப்யத பௌத்ர லாபம் ।
தாராம்ச போக மகிலம் ஸ்ம்ருதிமாத்ர துஷ்டா
ஸந்தோஷிணீ விதரதிஹ ஹி ஸத்யமேவ ॥ 32

தாரித்ர்ய பீதிரத ரோக பயாதி பீதி:
நோம்ருத்யுபீதி: அத சத்ரு விஷாதிபீதி: ।
புஷ்ட: ஸுதுஷ்டஹ்ருதயோ நிவஸேத் சிராய
ஸந்தோஷ மாது : அதிகாதிக ஸத்கடாக்ஷாத் ॥ 33

ஸந்தோஷ மாது: அகிலேஷ்டதம் அத்புதம் ச
ய: ஸுப்ரபாதம் உஷஸி ப்ரபடேத் ஸபக்த: ।
ஸம்ப்ராப்ய நந்ததிநராம் ஸுதனம் ஸுபுத்ரம்
க்ஷேமம் ச பூஷணசயம் ச சிராயுரேவ ॥ 34

ஆஸ்த்தாய வீர பரமாஸனம் ஆர்திஹந்த்ரீ
கட்க த்ரிஶூல வரதாபய ஹஸ்தபூஷா ।
மந்தஸ்மிதாம் பிதமுகீ விலஸத் கிரீடா
ஸந்தோஷ நித்ய ஜனனீ ப்ரததாது காமான் ॥ 35

ராஜேச்’வரீ பத த்வந்த்வே
ஶ்ரீ ஷண்முக பதாப்ஜயோ: ।
நிவிஷ்டஹ்ருதய: ராமசந்த்ர:
தத் க்ருபயா அலிகத் ॥ 36

## ஶ்ரீ ஸந்தோஷிணீ மாதா
## மங்களாஷ்டகம்

மஹா கணேச’ ஸுதயோ:
ரக்ஷா பந்தன ஹேதவே ।
கணேச க்ருபயா ஜாத
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 1

கௌரீ வாணீ ரமா தேவீ
சக்த்யா ரக்ஷண ஹேதவே ।
ஸமுத்யோதிக ரூபாயை
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 2

மத்ய ப்ரதேச' மத்யஸ்த்த
கிரி ச்ருங்காலயே சுபே ।
கலாஷோடச' ஸம்பூர்ணா
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 3

அஷ்டமி நவமி பூர்ணா
ப்ருகுவாரே விசேஷத: ।
பூஜயா ச அதி துஷ்டாயை
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 4

சாந்தாயை ஸாதகானாம் ச
கோபனாயை விரோதினாம் ।
ஸர்வ சக்தி ஸ்வரூபிண்யை
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 5

வர்த்தின்யை தர்ம வர்த்தின்யை
ஹர்ஷ தாயை க்ஷணே க்ஷணே ।
ஸர்வமங்கள ரூபிண்யை
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 6

ஸ்வர்ணாயை ஸ்வர்ணவர்ணாயை
ஸ்வர்ண தாயை ஸ்வபூஜகே ।
கோதாயை க்யாதி தாயை ச
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 7

அதிரௌத்ராதி ஸௌம்யாயை
ஸித்தி தாயை ஸுகர்மணாம் ।
ஸர்வ ரக்ஷா கராயை ச
ஸந்தோஷின்யை ஸுமங்களம் ॥ 8

ஸந்தோஷினீ ஜகன் மாது:
மங்களம் படதாம் க்ருஹே ।
மங்களானி ப்ரவர்தந்தே
தத்ர லக்ஷ்மீச்' ச ஸுஸ்த்திரா ॥ 9

சுபம்

## எமது அரிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | ஸங்கடஹர சதுர்த்தி பூஜை | 5.00 |
| 2. | ஸ்தோத்ர மாலா – பாகம் 1 | 14.00 |
| 3. | ஸ்தோத்ர மாலா – பாகம் 2 | 14.00 |
| 4. | ஸத்ய நாராயண பூஜை | 7.00 |
| 5. | ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்தோத்ரமாலா | 6.00 |
| 6. | லலிதா ஸஹஸ்ரநாமம் – தமிழ் | 9.00 |
| 7. | லலிதா ஸஹஸ்ரநாமம் – ஸமஸ் | 9.00 |
| 8. | லலிதாம்பாள் சோபனம் | 8.00 |
| 9. | மஹாப்ரதோஷ மஹிமை | 8.00 |
| 10. | ஸந்தோஷிமாதா பூஜை | 5.50 |
| 11. | உதக சாந்தி | 8.00 |
| 12. | ப்ருஹத் ஸ்தோத்ர மஞ்சரி | 28.00 |
| 13. | ஸ்ரீ லக்ஷ்மீ குபேர பூஜை | 7.00 |
| 14. | சூரிய வழிபாடு | 17.50 |
| 15. | ஐயப்ப நித்ய பாராயணம் | 14.00 |
| 16. | விவாஹ பொருத்த அட்டவணை | 5.00 |
| 17. | வேதாந்த பாட்டுக்களும் தினசரி ஸ்தோத்ரங்களும் | 5.00 |
| 18. | ஆனந்த ராமாயணம் (5 பாகங்கள்) | 116.75 |
| 19. | விஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஸம்ஸ் | 7.50 |
| 20. | மாரியம்மன் தாலாட்டு | 3.50 |
| 21. | வைபவ லக்ஷ்மி பூஜையும் கதையும் | 5.00 |

| | | |
|---|---|---|
| 22. | கல்பத்ரயம் – (கணபதி – வரலக்ஷ்மீ ஸரஸ்வதி பூஜைகள்) | 4.00 |
| 23. | திருவேங்கடமுடையான் திருப்பள்ளியெழுச்சி | 2.00 |
| 24. | வரலக்ஷ்மீ விரத பூஜை | 4.00 |
| 25. | நவக்ரஹ அஷ்டோத்ரங்கள் | 3.50 |
| 26. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி | 2.50 |
| 27. | கந்த ஷஷ்டி கவசம் | 2.00 |
| 28. | ஸ்ரீ காமாட்சி அம்மன் விருத்தம் | 2.50 |
| 29. | திருவிளக்கு அர்ச்சனை | 2.00 |
| 30. | ஸ்ரீ புவனேச்வரி கவசம் | 2.50 |
| 31. | அகவல் கவசம் காரியஸித்தி மாலை | 2.50 |
| 32. | திருவிளக்கு பூஜை | 4.00 |
| 33. | ஷண்முக கவசம் | 2.00 |
| 34. | திருமுருகாற்றுப்படை | 2.50 |
| 35. | நவக்ரஹ ஸ்தோத்ரம் கோளறு பதிகம் | 2.50 |
| 36. | சிவபுராணம் | 2.00 |
| 27. | அச்வத்த பிரதக்ஷிணம் | 2.50 |
| 28. | லலிதா ஸகஸ்ரநாமம் | 3.00 |



இவையனைத்தும் கிடைக்குமிடம்

**கிரி டிரேடிங் ஏஜென்ஸி,**

58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு,

மைலாப்பூர், சென்னை – 600 004.

போன் – 494 3551



## குங்குமத்தின் மகிமை

மங்களகரமான வாழ்வுக்கும், மன நிறைவுக்கும் மங்கையர்கள் மன மகிழ்ச்சியோடு அணிந்து கொள்ளும் திலகம் குங்குமம். என்றென்றும் பக்தர்களுக்கு நன்மையை அளிக்கும் மதுரை மீனாட்சியம்மையார் நெற்றியில் அணிந்துள்ள குங்குமம். வெள்ளி நிலவில் பிரகாசிக்கும் சந்திரனைப்போன்ற மங்கையர் முகமதில் இந்த குங்குமப்பொட்டு ஒரு செம்பவளம் போல் காட்சியளிக்கும் உவமையான பெருமையைக் கொண்டதாகும். தாமரை போன்ற திருமுகத்தையுடைய தேவிகாமாட்சியும், கருணைமுகம் கொண்டவளாம் காசி விசாலாட்சியும் நெற்றியில் அணிந்துள்ள பெருமை இந்த குங்குமத்திற்குண்டு. மதுரையை எரித்து சாம்பலாக்கிய கற்பில் சிறந்த கண்ணகி தன் திருமுகத்தில் அணிந்த பெருமையும், ராஜாமணி என்ற அன்னையின் நெற்றியில் நலம்பெற விளங்கிய பெருமையும் இந்த குங்குமத்திற்குண்டு. கண்ணின் இமைபோல் கற்பினைக் காத்துவரும் நல்ல குலத்தில் பிறந்த மாதர்களின் பெருமையைப் போற்றி நாட்டவர் வணங்கி அணிந்து வரும் குங்குமம். இந்த குங்குமத்தை எல்லோரும் நெற்றியில் அணிந்து அனைத்து பலன்களையும் அடையவேண்டுமாய் இறைவனை வேண்டிக்கொள்கிறோம்.

